
அவரது தோற்றப்
பொலிவின் கம்பீரமும்
மிடுக்கும் அலாதி...
அவர் அணியும் ஆடைகள்
நாகரீகத்தின் சின்னம். வெற்றிப்
பெருமிதம் துலங்கும் அவரது
தோற்றத்துக்கு அடிப்படை சக்தி
"டெரிலீன்" சூட்டிங்தான்.
இறக்குமதி செய்யப்பட்ட பாலி
யஸ்டர் நூலால் தயாரிக்கப்பட்ட
சக்தி "டெரிலீன்" சூட்டிங்கு
களும், ஷர்ட்டிங்குகளும் இலை
த்து மடிப்புக் கலையாமல் அணி
யக்கூடியவை. நிறம் மங்காமல்
நீடித்து உழைக்கும் இவை சொகு
சானவை என்பதோடு எங்கும்
அணிந்து செல்ல ஏற்றவை.
போதார்
தயாரிப்புகள்
Shakti Silks
டெரிலீன் சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகள் . ரேயான் சூட்டிங்குகள் . க்ரேப்
டஃபேட்டா . சாடின் . ப்ரோகேட் . நைலான் . ரேயான்



# மானேர்ஸ்
# கிரைப் மிக்ஸ்சர்
# கொடுத்து



**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்** அஜீரணத்தைத் தடுக்கிறது. அதிலும் குறிப்பாக குழந்தைகளுக்குப் பற்கள் தோன்றும்போது பெருமளவில் உதவுகிறது.

குடலில் ஏற்படும் திருகுவலி போன்ற வயிற்று வலி சம்பந்தமான தொல்லைகளைப் போக்கி, சுகமான நிலையை உண்டாக்குகிறது.

வயிற்று வீக்கங்களை- உப்புசங்களைப் போக்கி, காற்று பிரிவதற்கு உதவுகிறது.

உடல் நலத்தைப் பாதுகாத்து, குழந்தை அமைதியுடன் உறங்கவும் உறுதுணைபுரிகிறது.

# மீண்டும்
# புன்னகை
# தோன்றக்
# காணுங்கள்





ஒரு நாளைக்கு இருமுறை வீதம்
ஒவ்வொரு நாளும்
**மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்**
கொடுத்து வந்தால், உங்கள் குழந்தை
உற்சாகத்துடனும், உடல்
நலத்துடனும் காணப்படும்



**GEOFFREY MANNERS & COMPANY LIMITED**

ASP/GM 18 TM

# கல்கி

## பொருளடக்கம்

குரோதி, ஆனி 1 ● ஜூன் 14





மூஷிகர்: பள்ளிக்கூடம் திறந்து பையன்களெல்லாம் தைரியமாக உள்ளே போகிறார்கள். விநாயகப் பெருமானே! பள்ளிக் கட்டிடங்களைக் காப்பாற்றுவாயாக!



மலர் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 46

# நேருவுக்குப் பின்...

"நேருவுக்குப் பின் இந்தியாவின் பிரதமர் யார்? நேருவுக்குப் பின் இந்திய அரசியல் என்ன ஆகும்??" என்ற வினாக்கள் நீண்ட நாட்களாக வினவப்பட்டு வந்தன. ஏதேதோ ஹேஷ்யங்களும் சொல்லப்பட்டன. அந்தக் கேள்விகளுக்கு நடைமுறையில் விடை சொல்லவேண்டிய சமயம் இப்போது வந்திருக்கிறது.

பெரியவர்களாக வாழ்ந்த எவருடைய மறைவையுமே 'ஈடு செய்ய முடியாத நஷ்டம்' என்று குறிப்பிடுவது வழக்கம். நேரு அவர்களின் மறைவு உண்மையிலேயே ஈடு செய்ய இயலாத இழப்புதான். தனிப்பட்ட எந்த மனிதரோ; அல்லது கோஷ்டியோ கூட நேருஜியின் இடத்தை இட்டு நிரப்ப முடியாது. ஆனும் கட்சித் தலைவர், பிரதம மந்திரி என்பதற்கெல்லாம் மேலாக நேருஜிக்கு எனப் பிரத்தியேக சரித்திரமொன்றும், முக்கியத்துவமும் உண்டு. அதை வேறு யாரும் பெறமுடியாது. காரியசாத்தியமற்ற அந்த விஷயத்தைப் பற்றி நாம் துக்கித்துப் பயனில்லை. இருப்பவர்களில் சிறந்தவரைக் கொண்டு மேலே காரியத்தை நல்ல முறையில் நடத்த வேண்டும்.

இந்த அம்சத்தில், ஸ்ரீ லால்பஹாதூர் சாஸ்திரி அவர்கள் புதுப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதில் மெத்த மகிழ்ச்சி அடைகிறோம். நல்லவர், சமநிலை குலையாதவர், அடக்கமானவர், மிகையாக எதுவும் செய்யமாட்டார் என்று நம்பக்கூடியவர்—காங்கிரஸ் ஆட்சியில் இவரைவிட நல்ல பிரதமரை எதிர்பார்க்க முடியாது என்ற நிறைவுடன் ஸ்ரீ லால் பஹாதூர் சாஸ்திரி அவர்களை வரவேற்கிறோம். புதிய பிரதமரவர்கள் தமது பொறுப்பை நன்குணர்ந்து செயலாற்றப் பிரார்த்திக்கிறோம்.

அவர் முக்கியமாக உணரவேண்டியது, அகில உலகமும் நேருஜிக்குச் செலுத்திய புஷ்பமாலைகள் யாவும் அவரது தனிப்பட்ட குண விசேஷங்களுக்குத்தானேயன்றி, அவரது கொள்கைகளுக்கு அல்ல என்பதைத்தான். நேருஜி வெளிப்பார்வைக்கு எவ்வளவு பிடிவாதக்காரராயிருந்தாலும், உள்ளூறத் தமது கருத்துக்கள் சரிதானா என்று பரிசீலித்துப் பார்த்து, மாற்றுக் கருத்துக்களை ஏற்கவும் பழகி வந்தார் என்பதைப் புது மந்திரி சபை நினைவில் கொள்ள வேண்டும். குறிப்பாக இந்தியா — பாகிஸ்தான் உறவு, ஆட்சிமொழிப் பிரச்னை முதலியவற்றில் நேரு அவர்கள் காங்கிரஸ் கட்சியின் கருத்துக்களை விட மிகவும் பரந்த மனப்பான்மை கொண்டிருந்தார் என்பதை யாரும் மறுக்க முடியாது. எனினும் கட்சியின் நலனை முன்னிட்டும், மாற்றுக் கருத்துள்ளவர்களுக்கு விட்டுக்கொடுப்பது அகௌரவம் என்ற அபிப்பிராயத்திலும் அவர் ஒரு குறிப்பிட்ட வழியிலே செல்லவேண்டியிருந்தது. 'அதே வழியில்தான் நாங்களும் கண்ணை மூடிக்கொண்டு செல்வோம்' என்று புதிய மந்திரி சபையினர் முடிவு செய்தால் அது விவேகமாகாது; நேருஜிக்குச் செய்யும் மரியாதையும் ஆகாது. நாட்டை அபிவிருத்தி செய்யவேண்டும் என்பதுதான் நேருஜியின் ஒரே ஆசை. அதற்காக அவர் ஒரு குறிப்பிட்ட மார்க்கத்தைப் பின்பற்றினார்; அவற்றில் கண்ட குற்றங்களை அகற்றி நல்ல மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துத் தேச சுபிட்சத்தைப் பெற்றுத் தர முடியுமானால் அதுவே நேரு அவர்களின் ஆன்ம சாந்திக்குரிய சிராத்தமாகும்.

புதிய மந்திரி சபையினர் அடக்கத்துடன் மாற்றுக் கருத்துக்களுக்குச் செவிசாய்த்து ஏற்றுக்கொண்டு, ராஷ்டிரபதி முதலியவர்களின் ஆலோசனைகளையும் எடுத்துக்கொண்டால் நாட்டில் நல்லாட்சி ஏற்படும். நேருஜியின் மறைவுக்குப் பின், அரசாங்கத்தின் தவறுகளை மக்கள் வெளிப்படையாக எடுத்துச் சொல்லக்கூடிய சூழ்நிலை உண்டாகியிருப்பது ஜனநாயகத்துக்கு நல்லதேயாகும். என்றாலும் தேர்தல்கள் பணச் சந்தை

யாகி விட்டபடியால் இன்னமும் எதிர்க் கட்சிகளின் வளர்ச்சிக்குச் சாதகமான சூழல் இல்லை. எனவே காங்கிரஸாரே கொள்கைகளை ஒருமுறைக்கு இருமுறையாகப் பரிசீலித்து எதிர்க் கட்சியின் பங்கையும் தாங்களே ஆற்ற வேண்டும். பத்திரிகைகளின் பொறுப்பும் பங்கும் இனி அதிகம். தைரியமாகவும் யோக்கியமாகவும் அவை எதிர்க்கட்சி வேலையைச் செய்யவேண்டிய காலம் வந்து விட்டது.

புதிய மந்திரி சபை உடனடியாகக் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் சில உண்டு. இவற்றை ராஜாஜி அவர்கள் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். எதிராளிகளை எதிர்பாராமல் அரசாங்கம் ஒருதலைப்பட்சமான அன்பையும் நம்பிக்கையையும் காட்டிச் சில முடிவுகளைக் காணவேண்டும் என்கிறார் ராஜாஜி. அந்நிய நாட்டுக் கொள்கைகளில் அன்பே மையக் கொள்கையாக வேண்டும். முக்கியமாக, பாகிஸ்தானிடம் நேய உணர்வைக் காட்டி, நம்பிக்கை வைத்து, நட்புக் கொண்டேயாகவேண்டும். நேரு அவர்கள் இறுதிக் காலத்தில் இதற்கே பெரும்பாலும் முயன்று வந்தார். நாம் ஒருதலைப்பட்சமாக அன்பு காட்டுமுன்பே பாகிஸ்தானும் அன்பான சமிக்ஞை செய்திருப்பது வரவேற்க வேண்டிய சூழ்நிலை. அயூப்கான் அவர்களும், பூட்டோ அவர்களும் நட்புப் பான்மையுடன் பேசியிருப்பதும் ஸ்ரீ லால் பஹாதூர் அவர்கள் அந்த உணர்வைப் பிரதிபலித்திருப்பதும் சுபசூசகங்களாகும். சமாதானத்துக்காக எதையும் விட்டுக் கொடுப்பது என்பது சரியான கொள்கையல்ல. ஆனால் நட்புக்காகத் தியாகங்கள் செய்யலாம். இந்த உணர்வுக்கு வறட்டு ஜம்பம் தடை செய்யாத முறையில் இந்திய சர்க்கார் பணியாற்றினால் நம் சகோதர நாடாகிய பாகிஸ்தானுடன் நாம் அன்பில் இணைந்து வாழ முடியும். இறைவனின் லீலா விநோதத்தில் இதற்காகவே, நேரு அவர்கள் தமது உயிரை அளிக்க வேண்டியிருந்தது என்று நம்மைத் தேற்றிக் கொள்ளலாம். நேரு அவர்கள் இறுதிவரை முயன்றும் அடைய முடியாததை இன்றைய ஆட்சியாளர் சாதித்தார்களானால், அதுவே தலைவனுக்கு நடந்த மகத்தான இறுதிச் சடங்கின் நிறைவாகும்.

உள்நாட்டு விஷயத்திலும் அன்பு வழியை அரசினர் பின்பற்ற வேண்டும் என்கிறார் ராஜாஜி. பாகிஸ்தானிடம் நம்பிக்கை வைப்பதுபோலவே நம் நாட்டுத் தொழிலதிபர்களிடமும், விவசாயப் பெருமக்களிடமும் நம்பிக்கையும் அன்பும் வைத்து உற்பத்திக்கு ஊக்கமளித்தால் நாடும் அதற்குச் சரியான முறையில் விடை சொல்லும். அரசாங்கத்தைக் கண்டு மக்கள் அஞ்சாமல், அரசாங்கமும் மக்களும் அன்பில் இணைவார்கள். அரசாட்சி புரிவதற்கு அன்பை விட நல்ல விதி எதுவும் உண்டா? மக்களிடம் அன்பும் நம்பிக்கையும் வைத்து, பண வீக்கத்தையும் வரிச் சுமையையும் குறைத்து அவர்களுக்கு நிம்மதி அளித்தால் தேச உற்பத்தி சிறப்பாகப் பெருகும். பொருளாதார நெருக்கடிக் காலங்களில் பழைய பட்ஜெட்டுகளையும், திட்டங்களையுமே பிடிவாதமாக அமுலாக்க வேண்டும் என்ற அவசியமில்லை. மனித மனத்தைப் புரிந்துகொள்ளவும், தீரமாகச் செயலாற்றவும் புது சர்க்காருக்கு ஆற்றல் இருந்தால் அது மக்களிடம் நம்பிக்கை வைத்து அன்பு வழியைப் பின்பற்றித்தானாக வேண்டும். இந்த ஆற்றலை ஆண்டவன் நமது அரசாங்கத்துக்கு அளிக்க வேண்டும்.

# என்ன சேதி?

## நிரந்தரமான துக்கம்

நேருஜியின் மறைவுக்காக நாடு பன்னிரண்டு தினங்கள் துக்கம் காக்க வேண்டுமென்பது சர்க்கார் உத்தரவு. துக்க சமயத்தில் மங்கள காரியங்கள் கூடாது என்பார்கள். ஆனால் ஆட்சியாளரோ தாங்கள் மங்களமான செயல் என நினைக்கும் ஒரு திட்டத்தை இந்தத் துக்க காலத்தில் வெகு அவசரமாகச் சட்டமாக்கியிருக்கிறார்கள். மரணம் சம்பவித்த ஒரு வீட்டில், பந்துக்கள் சேர்ந்திருக்கிறார்கள், பண்டங்களும் மிகுதியிருக்கின்றன என்பதால் அவசர அவசரமாக ஒரு திருமணத்தை நடத்தி வைத்தால் எப்படி இருக்கும்? அதே போல் நேரு அவர்கள் மறைந்த கையோடு, பார்லிமெண்டின் காங்கிரஸ் அங்கத்தினர்களில் பெரும்பாலோர் கூடியிருந்த வாய்ப்பைக் கண்டு பதினேழாவது திருத்தம் என்ற நில உரிமைப் பறிமுதல் மசோதாவைச் சட்டமாக்கியிருக்கிறார்கள். நேரு அவர்களுக்காகத் துக்கம் காத்து முடிந்த பின்பும், இந்தச் சட்டத்துக்காக நிரந்தரமாகத் துக்கம் கொண்டாட வேண்டியதுதான்!

இந்தத் துர்க்கதி நேராதிருப்பதற்குக் கடைசி முயற்சியாகச் சுதந்திரக் கட்சி

விவசாயிக
ளின்
உரிமைகள்
இங்கு
அடக்கம்

17வது
திருத்தம்

புனித அஸ்திகள்
நிலத்தை
வளமாக்குகின்றன!

PK

விலைவாசி
உயர்வு

சர்க்கார்
வர்த்தகம்

தேசத்தின் உற்பத்தி

PK

அங்கத்தினர்கள் ராஷ்டிரபதிக்கு விண்ணப்பம் விடுத்திருக்கிறார்கள்.

ராஷ்டிரபதி அவர்கள் பதவி ஏற்ற போது நமது அரசியல் சாஸனத்தைக் காப்பாற்றுவதாகப் பிரமாணம் எடுத்துக் கொண்டுள்ளவர். எனவே, மூல சாஸனத்தை நிர்மூலமாக்கும் பதினேழாவது திருத்தத்துக்கு மாறாக, முன்பு அம்பேத்கர் சபையில் தந்த உறுதி மொழியை நினைவூட்டி, நமது அங்கீகாரத்தை மறுத்தாரானால் தேசத்துக்கு மகத்தான தொண்டு செய்தவராவார்.

## நல்ல முடிவு

பள்ளிக்கூட ஆசிரியர்களின் சம்பளங்களில் எவ்விதமான வெட்டும் இராது, முன்போலவே ஊதியம் கிடைக்கும் எனச் சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருப்பதை அறிந்து பல்லாயிரக் கணக்கான பள்ளி ஆசிரியர்களுடன் நாமும் மகிழ்ச்சி அடைகிறோம். காலம் தாழ்த்தாமல் உடனடியாக இம்முடிவை எடுத்துக் கொண்டதற்குச் சென்னை சர்க்காருக்கு நமது பாராட்டுக்கள். இனிக் கல்வியின் தரத்தை உயர்த்துவதில் அரசாங்கம் முனைய வேண்டும்.

## சந்தானத்தின் யோசனை

நேரு அவர்கள் மறைந்ததனால் ஏற்பட்டுள்ள புதிய சூழ்நிலையை திரு காமராஜ் தெளிவாக விளக்கி யுள்ளார். இதுகாறும் காங்கிரஸ்காரர்கள் செய்து வந்த பிழைகளை நேருஜியைக் கருதி மக்கள் மன்னித்து வந்தார்கள்; இனி சிறு தவறுகள் செய்தாலும் அவர்கள் மன்னிக்கமாட்டார்கள்; எனவே புது ஆட்சித் தலைவர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

இவ்விஷயத்தில் ஸ்ரீ க. சந்தானம் மேலும் ஒரு படி சென்று யோசனை கூறியிருக்கிறார். ஜூன் 2-ந் தேதி மெயில் பத்திரிகையில் அவர் எழுதியுள்ள கட்டுரையில் 'பிரதமர் நேருஜி பல காரியங்கள் செய்திருக்கிறார். அவற்றில் சில அரசியல் சாஸனச் சட்டங்களுக்குட் பட்டவையாக இருக்கின்றன; சில அவற்றுக்குப் புறம்பாகத் தமது செல்வாக்கின் காரணமாக அவர் அமுல் செய்தவை. நேருஜியைப் பின்பற்றுவதாக நினைத்துக் கொண்டு புதுப் பிரதமர் தமது சொந்தச் செல்வாக்கின் பலத்தில் ஏதாவது செய்யத் துணிந்தால் தேசத்துக்கு ஆபத்து விளையும். இனி வரும் பிரதமர் பெரியோர்கள் வகுத்துக் கொடுத்த அரசியல் சாஸனத்தையும், அதன் சட்ட திட்டங்களையும் ஒழுங்காகக் கடைப் பிடிப்பவராக இருக்க வேண்டும். ஏனெனில் காந்திஜியின் மறைவு, நேருஜியின் மறைவு போன்று நாட்டுக்குப் பேராபத்துக்கள் விளையும்போது, தேசத்தை ஐக்கியப்படுத்திச் சீர்குலையாமல் காப்பாற்ற வல்லது அரசியல் நிர்ணயச் சட்டம்தான்!'

ஸ்ரீ க. சந்தானம் சாஸனத்திருத்த விஷயமாகக் கூறியுள்ள விவேகமான நல்லுரைக்கு நன்றி செலுத்துகிறோம்.

## விபரீத யோசனை

நேரு அவர்களின் ஆட்சியில் நடந்திருக்கக் கூடிய தவறுகளைப் புது மந்திரி சபை திருத்த வேண்டும் என்று நாம் விரும்பும் சமயத்தில், ஸ்ரீ டி. டி. கே. அவர்களோ ஒரு மாபெரும் தவற்றை மேலும் பூதாகாரமாக்க வேண்டும் என்று யோசனை கூறியிருக்கிறார். நாட்டில் விலைவாசிகள் உயர்ந்து வருகின்றன என்ற பேருண்மையைத் திடீரெனப் புரிந்துகொண்டுள்ள டி.டி.கே., அதற்கு ராஜ்ய சர்க்கார்களைப் பொறுப்பாக்கித் தமது கொடூரமான பட்ஜெட்டின் எதிர் விளைவுகளிலிருந்து தப்பிக்கப் பார்க்கிறார். விலைவாசி உயர்வைத் தடுக்க வேண்டுமானால் கண்ட்ரோலும் சர்க்கார் வர்த்தகமும் வலுப்பெற வேண்டுமென்று ஸ்ரீ டி. டி. கே. விபரீதமாக யோசனை கூறியிருக்கிறார். நாட்டை விநாசமாக்க இதைவிட வேறு வழியில்லை.

## 'ஏகமனது' என்றால் என்ன ?

ஸ்ரீ லால்பஹாதூர் சாஸ்திரி அவர்களைக் காங்கிரஸார் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்து விட்டதற்காகக் கட்சிக்கு ஏராளமான புகழ்மாலைகள் சூட்டப்படுகின்றன. அதே சமயத்தில் ஏகமனதாக முடிவெடுக்கத் திரு காமராஜ் மிகவும் உதவியதாக அவரையும் வானளாவப் பாராட்டி யிருக்கிறார்கள். ஏகமனதான முடிவை இன்னொருவரின் தூண்டுதலாலோ, நிர்வாகத் திறமையினாலோ பெற வேண்டுமெனில் 'ஏகமனது' என்ற பதத்துக்குப் பொருளே இல்லை. வெளிப்படையாக வேறு சிலரின் பெயரும் தலைவர் பதவிக்கு அடிபட்ட பின்பு, 'ஏகமனது' கோஷத்திலோ, அதனைச் சிருஷ்டி செய்பவரைப் பாராட்டுவதிலோ பொருளில்லை.

காங்கிரஸ் கட்சி விவகாரங்களைத் தேசிய விவகாரங்களாகவே நினைத்துப் பெரும் பத்திரிகைகளும் குழம்பி வருவதைத்தான், சமீபத்திய பிரதமர் தேர்வும் பாராட்டு மொழிகளும் எடுத்துக் காட்டுகின்றன.

# கயல்விழி

## அகிலன்

காலையில் உய்யவந்தாளைக் கைப்பிடித்தது முதல் அப்போது வரையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் யாவுமே ஆலவாய் நம்பிக்குக் கனவுலகக் காட்சிகளாகத் தோற்றமளித்தன. தினந்தோறும் மாலை நேரங்களில் காத்திருந்து கூடிப் பிரிந்த அந்த உய்யவந்தாளை அவன் மறந்தே போய்விட்டான். இப்போது அவன் போர் வெறியன்; கடமைக்காக அவள் கரம் பற்றியவன்.

இரவு வந்தது; நிலவு வந்தது ; தனிமை வந்தது. அவளும் வந்து விட்டாள்.

மலர்கள் பரப்பிய மஞ்சத்தில், மலர்க் கொத்துக்கள் ஊசலாடிய மஞ்சத்தில் சுற்றிலும் நறுமணங் கமழ்ந்த மஞ்சத்தில் அவன் தாமரை இலைத் தண்ணீர் போல் ஒட்டியும் ஒட்டாமலும் அமர்ந்திருந்தான். உச்சி முதல் உள்ளங்கால் வரையில் தன்னை அலங்கரித்துக் கொண்டு அடிமேல் அடி வைத்து அன்ன நடை பயின்று வந்தாள் நங்கை. நாணச் சிவப்பேறிய அவள் முகம் கீழே கவிழ்ந்திருந்தது. மெல்ல அவனைத் தலைதூக்கிப் பார்த்து விட்டு மீண்டும் தலை கவிழ்ந்தவாறே அவனருகில் வந்து அமர்ந்தாள் உய்ய வந்தாள்.

வயதில் சிறியவளாக இருந்தாலும் எப்படியோ அவனுடைய மனமாற்றம் அவளுடைய நுண்ணுணர்வுக்குப் புலப்பட்டு விட்டது. அதற்காக அவள் கலங்கவில்லை; கவலை கொள்ளவில்லை.

பகல் முழுவதுமே சிந்தனை செய்து வைத்துக் கொண்டு அவனிடம் எப்படிப் பழக வேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்திருந்தாள் அவள். ஆலவாய் நம்பி அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தானே தவிர அவளிடம் ஏதும் பேசவில்லை. அவளுடைய உள்ளத்தின் உறுதியை அவன் வேடிக்கை பார்ப்பது போல் இருந்தது அந்தக் காட்சி.

அவன் பேசா விட்டாலும் அவள்



பேசாத பேச்சையெல்லாம் அவன் கண்கள் பேசியதால், தானே முதலில் பேசத் தொடங்கினாள் உய்யவந்தாள்.

''காதலை நீங்கள் பலி கொடுக்கலாம்; அதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் நான் என் கடமையைப் பலி கொடுக்க முடியாதல்லவா? தங்களுக்கு வீரத் திலகமிட்டு அனுப்பி வைப்பதற்காகவே நான் தங்களை மணந்து கொண்டிருக்கிறேன்!''

தேகமெங்கும் புல்லரித்தது ஆலவாய்நம்பிக்கு. அவனையறியாது ஒரு புன்னகைக்கீற்று அவன் இதழில் மின்னியது.

''தாங்கள் வெற்றியோடு திரும்பி வரவேண்டுமென்று தவம் கிடப்பதற்கு எனக்கு உரிமை வேண்டுமல்லவா?'' என்று கேட்டு அவனுடைய கரத்தைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் அவள்.

''திரும்பி வராமல் வீர மரணம் அடைந்துவிட்டால்?'' என்று முதன் முறையாக அவன் வாய் திறந்து பேசினான். அவளால் இந்த முதல் பேச்சைத் தாங்கவே முடியவில்லை. என்றாலும் தனது அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல் புன்னகை பூத்தாள்.

''வீர மரணம் அடைந்தால் நானும் உடன் வருகிறேன்! அங்கு மாத்திரம் தங்களைத் தனியாக விட்டு விடுவேன் என்று நினைத்தீர்களா?''

இப்போது அவன் அதிர்ச்சியடைந்து அவளுடைய மிருதுவான இதழ்களைத் தனது விரல்களால் பொத்தினான்.

''கூடாது; கூடவேகூடாது!'' என்றான். ''என் தாயார் அன்புக்காக ஏங்குவார்கள். என் தந்தையாருக்கோ நாட்டின் கடமைகளைக் கவனிப்பதற்கே பொழுது போதாது. நீதான் அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.''

''அது மட்டிலும் என்னால் இயலாது'' எனச் சிரித்துக் கொண்டே சிணுங்கினாள் மணப் பெண்.

''இதோ பார்! நான் உன் கணவன். என் விருப்பப்படிதான் நீ இந்தக் கடமையை நிறைவேற்ற வேண்டும்.''

''அப்படி ஒரு நிலை நமக்கு வரவேண்டாம்; திருமணத்தன்று முதலில் சந்திக்கும் நாம் மகிழ்ச்சிகரமாக இந்தப் பொழுதைக் கழிப்போம்.''

''எனக்குப் பின் நீ உயிரோடிருப்பதாக வாக்களித்தால்தான் நான் உன்னிடம் பேசுவேன்!'' சிறு குழந்தை போல் பிடிவாதத்துடன் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

உய்யவந்தாள் அவனைத் தன் வழிக்குக் கொண்டு வருவதற்காக அவனிடம் கெஞ்சினாள்; குழைந்தாள்; கிள்ளை மொழியில் கொஞ்சினாள். அவன் மடியில் விழுந்து சிணுங்கினாள். அவனோ தன் பிடிவாதத்தைத் தளரவிடவில்லை.

''சரி, தங்களது சித்தம்! நீங்கள் ஒருவேளை வீர மரணம் எய்தினாலும் நான் தங்களுக்காகவும் தங்கள் அன்னையாருக்காகவும் உயிர் வாழ்கிறேன்.''

ஆலவாய் நம்பியின் ஆனந்தத்துக்கோர் எல்லை யில்லை. மடியில் கிடந்த வளை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு அவளது முக மலரைத் தன் விழிகளால் விழுங்கினான். அவனுடைய லட்சியத்தின் வெற்றித் திருவாகவே அவனுக்கு அவள் காட்சி யளித்தாள்.

காதலைப் பலி கொடுத்துவிட்ட இளைஞன்தான் அவன். ஆனால் இப்போது அவன் கணவனாகி விட்டவன். 'கணவனுக்கும் கடமை உண்டு; அதை நீங்கள் பலி கொடுக்கவில்லை' என்று கூறுவது போல் அவளது விழிகள் துடித்தன.

காலம் காலத்துக்குக் கணவனும் மனைவியுமாக வாழ்ந்தால்தான் அது இல்லற வாழ்க்கையா? கணப்பொழுதில் கூட அதன் சிரஞ்சீவித்தன்மையான அனுபவத்தைப் பெற்றுவிட முடியுமே! அந்த இரவை ஆலவாய் பொழுது புலர்ந்தவுடனேயே மறந்துவிடக்கூடும். ஆனால் உய்யவந்தாளுக்கோ அவள் உயிருள்ளவரையில் மறக்க முடியாத சிரஞ்சீவித்தன்மையுள்ள இரவு அது.

பொழுது புலர்ந்தது.—

வீரன் விடைபெற்றுக் கொண்டு களத்துக்குப் புறப்பட்டபோது உய்யவந்தாள் வீரத் திலகத்துடன் அவன் எதிரில் வந்தாள். அதற்குள் எத்தகைய தீவிரமான மாற்றம் அவளுடைய உருவத்தில்! வீரத் திலகமிட்ட அவளை அவன் பக்தி நிறைந்த கண்களோடு காணத் தொடங்கினான். அவள் அவனுக்குக் கொற்றவைத் தேவியாகவே தோற்றமளித்தாள்!

## பதினாறும் அத்தியாயம்

# வேங்கையின் பாய்ச்சல்

**சோழப்** பெரும் படை வந்து புகுந்து விட்டது பாண்டிய நாட்டின் எல்லைக்குள்!

பொங்கி எழும் பிரளய காலத்துக் கடல் அலை என்று அவன் காலாட் படையைச் சொல்வதா? வீறு கொண்டு வீசியடிக்கும் கொடும் புயல் என்று அதன் குதிரைப் படையைச் சொல்வதா? சேர நாட்டு மலைகள் அனைத்தும் ஒன்றாய்த் திரண்டு வெள்ளத்தில்

# டாடாவின் ஷாம்பு





அபூர்வமான பளபளப்பைத் தருகிறது.




நவநாகரீக மாதர்கள் டாடாவின் ஷாம்புவையே உபயோகிக்கின்றனர். காரணம் கூந்தலைச் சுத்தம் செய்வதற்கெனவே விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. அது. கூந்தலைத் துப்புரவாகவும், சுலபமாயும் சுத்தம் செய்கிறது டாடாவின் ஷாம்பு. கொழிக்கும் அதன் நுரை கூந்தலிலுள்ள தூசியை அகற்றி, கூந்தலைப் பட்டுப்போன்ற மென்மையுடனும், பளபளப்புடனும் மிளிரச்செய்கிறது. நறுமணத்திற்கோ கேட்கவேண்டாம். கூந்தல் சுத்தமாகவும், நறுமணத்துடனும் இருக்க நீங்களும் டாடாவின் ஷாம்புவை உபயோகியுங்கள்.

**எழில்மிக்க, மிருதுவான, பரிமளக் கூந்தலுக்கு — டாடாவின் ஷாம்பு!**

BI-TS-69 TAM

நம் சந்திரகாந்தாவிடமிருந்து மலரும் இரகசியம்:

# 'எனது மேனியெழிலுக்கு ஆதரவு லக்ஸ்'




சிந்தனைகவர் திரைச்சுடர் சந்திரகாந்தா சொல்கின்றார்: 'நானநித்த மேனிப் பராமரிப்பு முறைகளிலே தூய மெல்லினம் லக்ஸ் போன்ற இங்கிதமான சாதனமும் ஒன்றுண்டோ! வெண்ணெய் கடைந்தது போன்ற நுரைவளம், எண்ணுதற்கினிய நறுமணம், எழிலின் எல்லையை எவரும் எய்தலாம்; என் போலவே லக்ஸ் உபயோகியுங்கள் எந்நாளும்.'

**லக்ஸ் டாய்லெட் சோப்**
**சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

வெண்மையிலும், வானவில் வண்ணங்கள் நான்கிலுமுண்டு

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

LYS. 182-140 TM

புரண்டு வந்தது என்று அதன் யானைப் படையைச் சொல்வதா? — பைந்தமிழ் வளர்த்த பாண்டிய மண்டலத்தைக் கடல்கோள் கொள்ள வந்த காலனை போல் மூன்றாம் குலோத்துங்க சோழர் மூண்டெழுந்து விட்டார்.

எங்கும் இதுவே பேச்சு: 'சோழப் பெரும் படை சூறாவளிபோல் வந்து விட்டதாமே!'

எங்கும் இதுவே மூச்சு: 'வழியில் ஒன்றையுமே விட்டு வைக்காமல் அது நிர்மூலமாக்கிக்கொண்டு வருகிறதாமே!'

பாண்டிய நாட்டின் வடகிழக்கு எல்லையிலிருந்த மட்டியூரிலும் கழிக் கோட்டையிலும் சோழப் பெரும் படைக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. பரம்பரை வீரர்களான மறவப் படையினரும் ஏழகப் படையினரும் கடைசி மூச்சு உள்ள வரையிலும் போராடத் துணிந்தனர். குலசேகர பாண்டியர் மதுரை மாநகரத்தின் பாதுகாப்பைச் சுந்தர பாண்டியனிடம் விட்டு விட்டுத் தாமே வடக்கு எல்லைக்கு வந்திருந்தார்.

குன்றின் உச்சியிலிருந்து அவர் பகைப் படையைக் கண்ணோட்டம் விட்டபோதுதான் அவருக்குக் குலோத்துங்கரின் நோக்கம் புரிந்தது. அவர் பாண்டிய நாட்டை வெற்றி பெற வரவில்லை; வேருடன் பற்றிக் களைய வந்திருக்கிறார். அடிவானத்தை நெடுந்தரை தொடும் வரையிலும் ஒரே வீரர்கள்! வீரர்கள்! வீரர்கள்!

ஏழகப் படையினரும் மறவப்படையினரும் ஏறுகளெனவே பகைவர்கள் மீது தாவினார்கள். புதிதாகப் படையில் சேர்ந்த லட்சக்கணக்கான வீரர்களும் தங்கள் வாள் வீச்சையும் வேல் வீச்சையும் நிறுத்தினார்களில்லை. ஆனால் காற்றைக் கிழித்துக் கடுமழையெனப் பொழிந்தன சோழ நாட்டு வீரர்களின் கூரம்புகள். யானைக் கூட்டமோ, வானத்தில் திரண்டு வந்த கார்மேகத் திரள் மண்ணுக்கு இறங்கி வந்தது போல் அவர்கள் மீது பாய்ந்து அழித்தது. முதல் நாள் போரிலேயே முக்கால் பகுதிப் பாண்டிய வீரர்கள் வீர சுவர்க்கம் புகுந்துவிட்டனர். அதற்குள் இரவுவந்ததால் போர் நிறுத்தப்பட்டது.

மறுநாள் பொழுது புலர்ந்தவுடனேயே எல்லைப்போர் முடிந்து விடும் போல் தோன்றியது. குலசேகர பாண்டியர் படுகளத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுப் பாசறைக்குள் புகுந்தார். 'மதுராந்தகம் நடக்கப் போகிறது! மதுராந்தகம் நடக்கப் போகிறது!' என்று அவர் மனம் அடித்துக் கொண்டது. எஞ்சியிருக்கும் வீரர்களின் எண்ணிக்கை அவருக்கு நம்பிக்கை தருவதாக இல்லை.

படைத் தலைவர்களை அழைத்து வைத்துக்கொண்டு மறு நாள் போர் பற்றிப் பேசினார். தம்முடைய முடிவை அவர் நிச்சயப்படுத்திக் கொண்டதால், கூடுமானால் சுந்தர பாண்டியனை மதுரையில் வீழ்ந்து விடாமல் பார்த்துக்கொள்ளச் சொன்னார்.

''அவனிடம் சொல்லுங்கள்: போரில் வீர சுவர்க்கம் அடைவது மட்டும் வீரனுக்கு அழகில்லை; மறு போர் நடத்தி வெற்றி பெறுவதற்காகத் தன்னைக் காத்துக் கொள்வதும் வீரந்தான் என்று சொல்லுங்கள்!''

நள்ளிரவில் திடீரென்று குலசேகர பாண்டியரின் பாசறை சோழ நாட்டு வீரர்களால் முற்றுகையிடப்பட்டது போல் தோன்றியது. போர் நெறியோ வழக்கமோ இல்லாத இந்த வஞ்சகத்தை நினைத்துப் பார்க்கக் கூட அவருக்கு நேரமில்லை. மளமளவென்று என்னென்னவோ நடந்து விட்டன. வீரர்கள் விழித்துக் கொண்டு போர் தொடுப்பதற்குள் அவருடைய பாசறையிலிருந்து அவர் அகற்றப்பட்டு விட்டார். பகைவர்களால் அவர் கொல்லப்பட்டுவிட்டாரா? சிறைப்பிடிக்கப்பட்டுவிட்டாரா? எல்லாமே இருளில் நடந்து முடிந்துவிட்டதால் யாருக்கும் ஏதும் விளங்கவில்லை.

கருக்கிருட்டு நேரத்தில் மறவப் படைத் தலைவர் மழவச் சக்கரவர்த்தி தம்முடைய படை வீரர்களுக்குப் பின்கண்டவாறு கட்டளையிட்டார்:

''உடனடியாக நாம் காடுகளுக்குள் புகுந்து குறுக்கு வழியாக மதுரைக்குச் செல்ல வேண்டும். அரணுக்குக் காவலாக இருந்து மதுரையைக் காக்க முயற்சி செய்வதுதான் நமக்குள்ள ஒரே வழி. அரண் மீதிருந்தால் நாம் பகைவர்களுக்கு அதிகமான அழிவைக் கொடுக்க முடியும். வாருங்கள், இளவரசர் சுந்தரபாண்டியரோடு சேர்ந்து கொள்வோம்!''

குலசேகர பாண்டியரைப் பற்றி அவர் ஏதும் செய்திகள் கூறக் கூடும் என்று எதிர்பார்த்தார்கள் வீரர்கள். ஆனால் அவரோ ஏதும் கூறவில்லை. தலைவரிடம் குறுக்கிட்டுப் பேசத் துணியாத வீரர்கள் அவரது கட்டளைப்படியே காட்டுக்குள் புகுந்து விரைந்தனர்.

மறு நாள் பகலில் போரை எதிர்பார்த்திருந்த சோழப் பெரும் படை பாண்டியர்கள் ஓடி ஒளிந்து விட்டார்கள் என்று குதூகலம் கொண்டது. அவர்களுடைய ஆனந்தத்திற்கோர் எல்லை இல்லை.

''நீங்கள் ஆனந்தப்பட வேண்டிய நாள் இன்னும் வரவில்லை!'' என்று உறுமினார் குலோத்துங்கர். ''பாண்டிய நாட்டையே நீங்கள் அழித்து

ஒழிப்பதற்காக வந்திருக்கிறீர்கள் என்பதை மறக்க வேண்டாம்! முன்னேறிச் செல்லுங்கள்! தஞ்சைப் படையும் உறையூர்ப் படையும் மதுரையை வளைத்துக் கொள்வதற்கு முன்னால் நாம் அங்கே இருக்க வேண்டும்!''

வீரர்களைப் படுகளத்திலே பலி கொடுத்த பெண்களுக்கு அவர்களுடைய உடல்களைத் தேடி அழுவதற்குக் கூட நேரம் கொடுக்கவில்லை சோழப் படையினர். புயலெனச் சீறிச் சாடும் குதிரைப் படையினர் நாடு நகரமெல்லாம் புகுந்து வீடுகளைத் தீயிட்டுப் பொசுக்கத் தொடங்கினர். திரும்பியபக்கம் ஒரே தீ!

பயத்தின் பீதியால் நிலை கெட்டு நாலா பக்கங்களிலும் சிதறியோடும் பெண்களின் கூக்குரலும் குழந்தைகளின் அழுகுரலும் அவர்களுக்கு எக்களிப்பையே தந்தன. கூரைகள், வைக்கோல் போர்கள், நெற் குவியல்கள், ஓடிச் சிதறும் மனிதர்களின் உடைகள்-எங்குமே தீச்சுடர்கள் துடித்தன.

வீடு வாசல்களைத் துறந்து விட்டுக் காடுகளை நோக்கி ஓடி ஒளிந்தவர்கள் பலப் பலர்; கன்று காலிகளை விரட்டிக் கொண்டு குன்றுகளின் சரிவுகளில் மறைந்தவர்கள் பலப் பலர்; பயத்தின் பதற்றத்தால் நினைவுச் சக்தியை இழந்து விட்டுக் குதிரைகளின் குளம்படியிலேயே பட்டு வீழ்ந்தவர்கள் பலப் பலர்.

காலாட்படைப் பெரு வெள்ளம் இரத்த ஆற்றைப் பெருக்கெடுத்தோடச் செய்தவாறு பாய்ந்து மதுரையை நோக்கி வந்தது. வழியெங்கும் கொலை, கொள்ளை, சூறை! இரும்பு உலக்கைகளால் எஞ்சி நின்ற வீடுகளைத் தரை மட்டமாக்கிக்கொண்டு வந்தது அது. நீர்நிலைகள் தூர்க்கப்பட்டன. நெற் கழனிகள் துவைக்கப்பட்டன. குளிர் தரும் சாலை மரங்கள் வெட்டி வீழ்த்தப்பட்டன.

யானைப் படை இரத்தச் சேற்றில் மனித உடல்களைப் போட்டுத் துவைத்துக்கொண்டே முன்னேறியது. மேடுகள், பள்ளங்கள், வீடுகள் வாசல்கள் எல்லாவற்றையுமே சமதரையாக்கி இரத்தத்தாலும் நிணத்தாலும் பூசி மெழுகியவாறு நடந்தது அது. ஊர்களெங்கும் துண்டிக்கப்பட்ட சிரங்கள், கைகள், கால்கள், உடலங்கள்!

''ஒரு நாள் கூட எதிர்த்து நிற்க முடியாத பாண்டியப் பதர்களா தன்னுரிமை பெற்று விட்டதாக எமக்கு ஓலை அனுப்பத் துணிந்தனர்!'' என்று வெறுப்போடு கொக்கரித்தார் குலோத்துங்கர். சுந்தர பாண்டியனின் துடுக்குத்தனத்தைப் பற்றி அவர் ஒவ்வொரு படைப் பிரிவின் தலைவரிடமும் கூறியிருந்தார். அவனை உயிருடனோ அல்லது பிணமாகவோ கொண்டு வரும் வீரர்களுக்குத் தனியாகப் பரிசுகள் வழங்கப்படும் என்று அவர் அறிவித்திருந்தார்.

மட்டியூர், கழிக்கோட்டை முதலிய போர்க் களங்களுக்குச் சுந்தர பாண்டியன் வரவில்லையென்பதும், அவன் மதுரையைக் காத்து நிற்பதும் அவருக்குத் தெரிந்து விட்டன. ஆகவே வீரர்களின் ஆர்வமெல்லாம் இப்போது மதுரையின் மீதும் சுந்தர பாண்டியன் மீதுமே இருந்தன. சக்கரவர்த்தியிடம் பரிசு பெறும் வாய்ப்புக்காக ஒவ்வொருவருமே துடித்துக் கொண்டிருந்தனர்.

''எங்காவது இளவரசன் ஓடி ஒளிந்து விட்டால் என்னசெய்வது?''என்று சக்கரவர்த்தியிடம் கேட்டார் பல்லவராயர்.

''அவன் அப்படி ஒளிந்து கொள்ளக் கூடியவன் என்று தோன்றவில்லை. மதுரைப் போரும் நமக்கு அவ்வளவாக எளிதாக இருக்காது'' என்றார் சக்கரவர்த்தி. இளமைத் துடிப்பும் வீரமும் உள்ள தலைவனைக் கொண்ட போர்க்களத்தின் தனி ஆற்றலை அவர் நன்கு உணர்ந்தவர். ஆகவே மதுரையைக் கைப்பற்றுவதற்கான பல வகை வழிகளை அவர் பல்லவராயரிடம் விளக்கலானார்.

சக்கரவர்த்தியின் படைகள் மதுரையின் எல்லைக்கு வந்தபோது, தஞ்சையிலிருந்தும், உறையூரிலிருந்தும் வந்த சோழப் படைகள் வைகை நதியின் வட கரையில் காத்திருந்தன. மதுரையின் புற மதிலைத் தொலைவிலிருந்து உற்று நோக்கினார் சக்கரவர்த்தி. அதன் உச்சியில் கயல் பொறித்த பாண்டியரின் பட்டுக் கொடி பறந்தது.

### பதினேழாம் அத்தியாயம்

## புலவர் நெஞ்சில் வாழ்வோன்

பாண்டியர் நெடுஞ்செழியன் காலத்து மதுரைமா நகரத்தின் கட்டுக்காவலையும், அதன் அரண், அகழ், போர்க் கருவிகள், ஆயுதக் கிடங்குகள் முதலியவற்றையும் தமது நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் அற்புத ஓவியமாகத் தீட்டியிருக்கிறார் கவிஞர் இளங்கோவடிகள்.

குலசேகர பாண்டியர் காலத்தில் அவருக்குப் பெரும் படையைத் திரட்

டும் உரிமை இல்லாவிட்டாலும் தலை நகரத்தையாவது பாதுகாக்க வேண்டு மென்பதற்காக அவர் எவ்வளவோ முன்னேற்பாடுகளைச் செய்து வைத் திருந்தார். அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபருக்கே கூடத் தெரியாமல் ஏழகப் படைத் தலைவர் அழகிய பெரு மாளைக் கொண்டு அவர் இரகசியமாகப் பல ஆயுதங்களைச் சித்தப்படுத்தி வைத் திருந்தார்.

நெடிதுயர்ந்த புற மதில், அதை அடுத்த அகழ், அதை அடுத்த காவற் காடு எங்குமே பகைவர்களுக்கான அபாயங்கள் பதுங்கி இருந்தன. மதி லின் மேல் மறைவாக விற்பொறிகள், கற்களை வேகமாக உந்தி உமிழும் கவண் கருவிகள், உலோகத்தைக் கொதிக்கக் காய்ச்சிப் பகைவர் மீது கொட்டும் கொப்பறைகள், கற்கள் நிறைந்த கூடைகள், தீப்பந்தங்கள் கொளுத்திக் கொள்ளும் அடுப்புக்கள், இரும்புத் தூண்டில்கள், சுருக்குக் கயிறுகள், வேல்கள், சூலங்கள், ஈருப்புலக்கைகள் இன்னும் எத்தனை எத்தனையோ வகைப் போர்க் கருவிகள் சோழப் பெரும் படையை வரவேற்கக் காத்திருந்தன. இவ்வளவிலும் பயிற்சிபெற்ற வீரர்கள் விழிப்போடு மதிலைக் காத்து நின்றனர்.

வடக்கு எல்லையிலிருந்து பின்வாங் கிக் காடுகள் வழியே வந்த பாண்டி வீரர்களும் மதுரையை அடைந்து விட்டனர். படைத் தலைவர்களோடு சேர்ந்து விழுப்பரையர் நாலா பக்கங் களிலும் குதிரையில் பறந்து சென்று காவல் வீரர்களுக்குக் கட்டளைகள் இட்டு வந்தார். போர் தொடங்கிய வுடன் இளவரசன் சுந்தரபாண்டியன் தலைமை தாங்கிப் படை நடத்தப் போவதாகப் படைத் தலைவர்கள் வீரர் களிடம் கூறி உற்சாகமூட்டி வந்தனர்.

மதில்கள் மேலிருந்த வீரர்களுக்குத் தொலைவில் தெரிந்த புழுதிப் படல மும், தீப்பற்றி எரியும் வீடுகளும், கடல் போன்ற பேரொலியும் பகைவர் களின் வருகையை அறிவித்துவிட்டன. வைகையின் வெள்ளத்தைத் தாண்டித் தோணிகளிலும் தெப்பங்களிலும் கட்டு மரங்களிலும் சோழர்கள் ஒரு புறம் வரத் தலைப்பட்டார்கள். கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று திசைகளிலிருந்தும் படைகள் குமுமிக் கொண்டிருந்தன.

''நாம் எதிர்க்க விரும்பாதவர்கள் போல் புற மதில்களின் வாயில்களை அடைத்து விடுவோம். முற்றுகை யிட்டோ, மதிலைத் தகர்த்தோ அவர்கள் நகருக்குள் நுழைய முயற்சிகள் செய் யட்டும்'' என்றார் விழுப்பரையர்.



பாரோ என்னிடம் ஒருமுறை சொன்னார்: 'பிறந்தவர் எல்லாருக்கும் மரணம் பிறப்புரிமை' என்று. வெளிப்படையான உண்மையை விசித்திரமாகச் சொல்லி விட்டார்...... நம்மால் சரியாக வாழ முடியவில்லை யெனில் சரியாகச் சாகவாவது தெரிந்திருக்க வேண்டும் — கையாலாகாத் தனத்தின் சுமையைக் குறைக்க இது ஒரு ரஞ்சகமான சிந்தனைதானே?

— ''பாரத தரிசனம்''

''நம்மைக் கோழைகள் என்றும் மதி லுக்குள் பதுங்கி வாழப் பார்க்கிறோம் என்றும் எள்ளி நகையாடுவார்களே?'' என்று கவலையோடு கேட்டார் மழவச் சக்கரவர்த்தி.

''எள்ளி நகையாடட்டுமே! அவர் களை நாம் எப்படியும் களைக்கச் செய்ய வேண்டும். நம்மால் மதுரையைக் கடைசி வரையில் காப்பாற்ற முடியா விட்டாலும் அவர்களுக்கு மிகப் பெரிய சேதத்தைக் கொடுத்து விட்டுத்தான் மதுரையைக் கொடுக்க வேண்டும்.''

குலோத்துங்க சோழச் சக்கரவர்த் திக்கு எப்போதுமே முற்றுகை நடத்திக் காத்திருந்து பழக்கமில்லை. கோட் டைக்குள்ளிருப்போரைப் பட்டினி போட்டுச் சிறிது சிறிதாக வதைப்ப திலும் அதுவரையிலும் செயலற்ற வகையில் வெளிப்புறத்தில் படைகளை வைத்திருப்பதிலும் அவருக்கு நம்பிக்கை கிடையாது.

காவற் காட்டை அழிக்க யானைப் படையை ஏவி விட்டார். காவற்காட் டின் கருவேலமுள்ளை வெட்டித் தள்ள வீரர்கள் முனைந்தனர். அகழைத் தூர்க்கும் வேலையிலும் ஏணிகள் வைத்து மதிலின் மேல் ஏறுவதிலும் பல்லாயிரக் கணக்கானவர்கள் ஏவப்பட்டனர். கோட்டை வாயிலைத் தகர்ப்பதற்கான மரத் தூண்களோடு யானைகள் முடுக் கப்பட்டன.

மதிலைச் சுற்றிலும் வெளிப்புறத்தில் வெற்றிக் களிப்போடும் வீர வெறி யோடும் ஆயிரமாயிரம் சோழ நாட்டு வீரர்கள் அதைத் தகர்க்க முற்பட் டிருந்த அதே வேளையில்...

மதில் மேல் மறைந்து நின்ற பாண் டியப் படை வீரர்களின் கைக் கொடிகள் அசைந்தன. **(தொடரும்)**

# கால்கேட்டின்மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது — சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் கிரீமினுல் உங்கள் பற்களை நன்ருகத் துலக்குங்கள். இதன் வீசிவரும், ஊடுருவும் தன்மையுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்.




வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிருர்கள்.**

# படம் பிடிக்கும் போதினிலே

திரைக்கதை, பாட்டு, வசனம் எல்லாவற்றையும் விட மிகவும் முக்கியமாக விளங்குவது சண்டைக் காட்சிகள். நடிப்போ, கதையமைப்போ எதுவும் இல்லாமல் சண்டைக் காட்சிகளுக்காகவே நூறு நாட்கள் ஓடிய தமிழ்ப் படங்கள் எத்தனையோ உண்டு. சண்டைக் காட்சிகளில் பாதிக்கு மேல் தந்திரக் காட்சிகள்; பொய்த் தோற்றங்கள்; பல 'ஷாட்டு'களின் வெட்டும், ஒட்டும் கொண்டவை. டைரக்ஷனின் திறமையும், பிலிம் எடிட்டரின் உத்திகளும், ஒளிப்பதிவாளரின் தனித் திறனும், சண்டையிடும் நடிகரின் சாகசங்களும் சேர்ந்து பிரமிக்கத் தக்க தோற்றங்களை உண்டாக்குகின்றன.

நான் ஒரு சமயம் சண்டைக்காட்சிகளில் நடிப்பதில் விசேஷத் திறமை கொண்டவரான எம்.ஜி.ஆருடன் பேசிக்கொண்டிருந்தபோது, ''மெய் சிலிர்க்க வைக்கும் கத்திச் சண்டைக் காட்சிகள் படமாக்கப்படும்போது பார்க்க ஆசையாயிருக்கிறது!'' என்றேன். அதற்கு அவர், ''நீங்கள் அத்தகைய காட்சிகளின் 'ஷூட்டிங்'கைப் பார்க்காமல் இருப்பது தான் நல்லது. அந்தச்சமயம் கையாளப்படும் தந்திர சாகசங்களையும், காமிராத் தந்திரங்களையும் ஒரு முறை கண்டுவிட்டால் உங்கள் பிரமிப்பு நீங்கிவிடும்; 'இவ்வளவுதானா!' என்று சப்பிட்டுப் போய்விடும்...'' என்று சிரித்துக்கொண்டே கூறினார்.

மேல் நாட்டில் கூடச் சண்டைப் படங்களுக்கும், அதில் நடிக்கும் சாகசம் அறிந்த நடிகர்களுக்கும் தனியானதொரு 'மவுஸ்' உண்டு.

சண்டைக் காட்சிகளுக்குப் பயிற்சி அளித்து டைரக்ட் செய்யத் தனியான 'ஸ்டண்ட் மாஸ்டர்' உண்டு. அவர்களுள் கேரளத்தைச் சேர்ந்த ஆர். என். நம்பியார் ஒருவர். எம். ஜி. ஆர். நடிக்கும் படங்களில் சண்டைப் பயிற்சி அளித்து வந்தவர். அவரைச் சந்தித்துப் பேசியதில் சுவாரஸ்யமான பல விஷயங்கள் தெரிய வந்தன.

திரு ஆர். என். நம்பியாரின் சொந்த ஊர் கேரளத்தைச் சேர்ந்த வடகரை. இவர் தகப்பனார் ஒரு 'ஸ்டண்ட் மாஸ்டர்'. இது இவர்களது பரம்பரைத் தொழில். ஜெமினியின் ''சந்திரலேகா'', ''மர்மயோகி'', ''மந்திரி குமாரி'', ''சர்வாதிகாரி'', ''மலைக் கள்ளன்'', ''குலேபகாவலி'' ஆகிய பிரசித்தி பெற்ற படங்களின் சண்டைக் காட்சிகளில் பொறுப்பேற்றவர் திரு ஆர். என். நம்பியார்.

''சண்டைக் காட்சிகளில் பயிற்சி அளிப்பது மிகவும் சிரமமான காரியம் இல்லையா?'' என்று அவரைக் கேட்டேன்.

''ஆமாம். ரொம்ப அபாயமானதும்கூட. விளையாட்டுச் சண்டைதானே என்று அலட்சியமாயிருப்பதற்கில்லை. கத்திச் சண்டையில் விபரீதமான காயம்பட ஏதுவுண்டு. மல்யுத்தக் காட்சிகளில் நிறைய ஆபத்துக்கள் ஏற்படலாம். சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஒரு குத்துக் கூட நிஜமான குத்தாயிருக்கக் கூடாது. ஆனால் நிஜமான குத்துப் போலவே படம் பார்ப்பவர்களைப் பிரமிப்பில் ஆழ்த்த வேண்டும். சண்டைக் காட்சிகளில் விறுவிறுப்பும், வாகவங்களும் தான் முக்கியம். வெளிப்புறக் காட்சிகளில் சண்டையைக் காண்பிப்பதானால் துணிச்சலும் சாகசமும் தேவை. மலைப்புறங்களில் நடக்கும் சண்டைக்காட்சிகளில் எத்தனையோ தடவை நானும் என் குழுவினரும் விபத்தில் சிக்கியிருக்கிறோம். ஸ்டண்ட்மாஸ்டராக வருவதற்குச் சண்டைப் பயிற்சி இருந்தால் மட்டும் போதாது. கடுமையான உழைப்புத் தேவை. நடிகர்களுக்கும் அப்படித்தான். நமது எம். ஜி. ஆர். மாதிரி சண்டைக் காட்சிகளில் நடிக்க வேறு யாரும் கிடையாது. அதற்கென்றே பிறந்தவர் அவர்.''

''எவ்வளவு கைதேர்ந்த நடிகரானாலும் சண்டைக் காட்சிகள் படமாக்கப்படும்போது 'ஸ்டண்ட் மாஸ்டர்' அவசியம் இருந்தாக வேண்டுமா?''

''அவசியம் இருந்தாக வேண்டும். நன்றாய் நடனம் பயின்றுவிட்ட பெண்மணிகளுக்கும் மேடையில் நடன ஆசிரியர் இருந்தாக வேண்டியிருக்கிறது அல்லவா?''



''உங்களுக்கு இந்தத் தொழிலில் எத்தனை காலமாக அநுபவம்?''

''கேரள நாட்டின் தனிக் கலையான 'களரிப் பயிற்று' என்ற கத்திச் சண்டையில் சின்ன வயசிலேயே அநுபவம் உண்டு. அது ரொம்ப அருமையான கலை. தச்சோளி ஒதேனன் என்னும் கேரளத்து மாவீரர் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர். கேரள நாட்டு மன்னர் சபையில் அந்தக் களரிப் பயிற்றில் தம் திறமையைக் காட்டினார். முந்நூறு வாள் வீரர்களுடைய வாள் வீச்சுக்களையும் சமாளித்துக் கருள் கத்தியை வீசினார். முந்நூறு வீரர்கள் கழுத்துக்களிலும் சுண்ணாம்புக் கோடு விழுந்திருந்தது. மன்னர் வியந்தார். 'கத்தியின் பின் பக்கம் பட்டதால் சுண்ணாம்புக் கோடு விழுந்திருக்கிறது. கத்தியின் கூர்மைப் பக்கம் படும்படி வீசியிருந்தேனானால்.....' என்றார் அவ்வீரத் திருமகன்!'' என்று ஸ்டண்ட் மாஸ்டர் நம்பியார் பரவசமுற்ற நிலையில் கூறினார்.

பட உலகில் சண்டைக்காரராக இருந்தாலும் திரை மறைவிலிருந்து கொண்டு திரை உலகுக்கு விறுவிறுப்பையூட்டும் திரு நம்பியார் மிகவும் நல்லவர்.

— விஜயம்



சூடாக ஒரு கப் தேயிலை
அருந்தியபின் ஏற்படும்
புது மலர்ச்சியே அலாதிதான்!

நீங்களே ஒப்புக்கொள்வீர்கள்

# டாடா-ஃபின்லே

## தேயிலை

ஈடில்லாத தேயிலை!

## புத்தம் புது தேயிலை

•

## சுவையுள்ள தேயிலை

•

## சிறந்த தேயிலை

**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!



பின்வரும் ஐந்து ரகங்களில்
கிடைக்கிறது:
ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்-டின்னில்
லலித் பொன்னிற அட்டைப்
பெட்டியில்
மிலாப் வெள்ளிநிற அட்டைப்
பெட்டியில்
பஹாதூர் ஆரஞ்சு நிற
அட்டைப் பெட்டியில்
ஷான் நீலநிற அட்டைப்பெட்டியில்



# ......குட்டிக் கதைகள்........... ......



ஹாஸ்யம் செய்யவே மனசு செல்லாத வாரம் இது. ஹாஸ்யக் குட்டிக் கதைகள் வெளியிட மனமில்லை. ஆனால், குபுக்கென்று சிரிக்க வைப்பதுதான் குட்டிக் கதையின் லட்சணம் என்பதில்லை. உள்ளம் உருக்கும் குட்டிக் கதைகளும் பல உண்டு. பெருங்காதை யான ஒரு சரிதத்தை வாழ்ந்து விட்டு அன்புக் குரிய ஜவாஹர் அவர்கள் மறைந்ததை யொட்டித் தில்லியில் இப்படிப் பல குட்டிக் கதைகள் நிகழ்ந்துள்ளன. நமது நிருபர் அனுப்பி வைத்துள்ள சில நெஞ்சுருக்கும் நிகழ்ச்சிகளைப் பாருங்கள்.

ஃ நேரு அவர்கள் மறைந்த செய்தி மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டுச் சபை கலைக்கப் பட்டவுடன் வெளியே வந்த அங்கத்தினர்கள் துயரமயமான ஓர் அற்புதத்தைக் கண் டார்கள். கன்னென்று அடித்துக் கொண் டிருந்த வெய்யில் கண நேரத்தில் மறைந்தது. பால்போல் வெளுத்திருந்த வானம் இருள்கப்பி மப்பும் மந்தாரமுமாகிவிட்டது. அன்று மாலை, நேருஜி பலமுறை சஞ்சரித்த தில்லி தனது மணலை யெல்லாம் சுழற்றி அவருக்கு அஞ்சலி தெரிவிப்பதுபோல் புயல் வீசிற்று. வானம் குமுறியது. மழையும் சிறிது நேரம் படபட வென்று கொட்டிற்று. ஆனால் லட்சக்கணக் கான மக்கள் இதொன்றையும் சிறிதும் பொருட்படுத்தாமலே தலைவரைத் தரிசனம் செய்யக் காத்திருந்தார்கள். நேருஜி பதினே ழாண்டுகளாக வசித்து வந்த பவனத்திலிருந்து இறுதியாகப் புறப்பட ஆயத்தமாகும் சமயத் தில் தில்லியே நில நடுக்கத்தில் அதிர்ந்தது. பிரதமர் இல்லத்தில் அதிர்ச்சி பலமாக இருந்தது. 'துயரச் செய்தி கேட்டு உலகம் நடுங்கியது' என்று சொல்வது வெறும் சம்பிர தாயச் சொற்றொடராக இல்லாமல் உண்மை யிலேயே லேசான பூகம்பம் நிகழ்ந்தது. தெய் வங்களை வழிபடாவிட்டாலும், இயற்கை அன்னையை வழிபட்ட நேருஜி. இயற்கை எய்திய போது இயற்கை பலவிதத்திலும் இறுதி மரியாதை செலுத்தி விட்டது.

ஃ கதறிக்கொண்டே கெடுபிடி செய்வது இயலுகிற காரியமா? இப்படிப்பட்ட விசித் திரக் காட்சிகளைப் பிரதமரின் மறைவின்போது தில்லி கண்டது. அழுதுகொண்டே வரும் ஜனக்கூட்டத்தை அழுதுகொண்டே போலீ ஸாரும் ராணுவத்தாரும் அமைதியாக்கிக் கொண்டிருந்தனர். ஒரு பெரிய ராணுவ அதிகாரி சிறு குழந்தையைப்போல் விம்மி விம்மி அழ, ஜவான்களும், போலீஸாரும் கண்ணீர் வடித்தவாறு நின்றனர்.

ஃ கிழிந்த ஆடையும், பரட்டைத் தலையு மாக ஊர் பேர் தெரியாத ஒரு கிழவி பிரதமர் மாளிகையின் புல்வெளியில் 'ரே பகவான், ரே பகவான்' என்று கூவியபடி உருண்டதைக் கண்டு அமெரிக்க-பிரிட்டிஷ் தூதரகப் பிரமுகர் களும் கண்ணீர் சிந்தினர்.

ஃ துயரம் தாளாத நிலையில் அடி மேல் அடி வைத்து நடக்க முடியாது போலும்! உருண்டு புரண்டால்தான் ஆறுதல் கிட்டும் போலும். ஏனெனில் இதோ நேரு அவர்களின் திரு உடலைத் தரிசித்துப் பாதங்களைக் கண் களில் ஒற்றிக் கொண்டு கீழே இறங்குபவர் களில் பலரும் படிகளில் அடிமேல் அடிவைத்து இறங்கவில்லை. உருண்டு உருண்டே கீழே வருகிறார்கள்.

ஃ ஆசாரிய கிருபளானியைக் கைத்தாங்க லாக இருவர் அழைத்து வருகிறார்கள். பிர தமரின் உடல் வைக்கப்பட்டிருந்த மாடியை அடைய அவர் படியேற முயலுகிறார்; முடிய வில்லை. ஒரு வாலிபர் குனிந்து அவரைத் தம் முதுகில் உட்காரச் சொல்கிறார். அவரை ஆரத் தழுவிக்கொண்டு அழுகிறார் கிருபளானி. ராணுவ அதிகாரி ஒருவர் அவரிடம் ஓடி வந்து 'லிப்டு'க்கு அவரை இட்டுச் செல்கிறார்.

ஃ 'விஜயலக்ஷ்மி வந்து விட்டார்' என்று பேச்சு எழும்பும்போதே இதயம் குமுறுகிறது. இதோ விஜயலட்சுமி பண்டிட் பறந்து கொண்டு வந்துவிட்டார். அவர் மட்டும் வரவில்லை. அன்புத் தமையனின் இதயத் துடிப்பு சரியில்லை என்று காலையில் கேள்விப் பட்ட தங்கை தம்மோடு பம்பாயின் பிரபல டாக்டர் ஒருவரையும் அழைத்து வந்திருக் கிறார் — அண்ணனைப் பரிசோதிப்பதற்காக. அதற்குள் மாபெரும் சோதனை நிகழ்ந்து விட்டது. கதை முடிந்து விட்டது!

ஃ நேருஜியின் விரிந்து பரந்த நெற்றியைத் திரும்பத் திரும்ப ஸ்ரீமதி விஜயலட்சுமி வரு டிக்கொண்டிருந்ததைக் காணும்போது, உல கத்துக்கெல்லாம் ஓயாமல் சிந்தித்த மூளை இந்த நெற்றிக்குப் பின்தானே இருந்தது என்று எண்ணி அதனை அவர் தூக்கத்தி லிருந்து விழிக்காமல் சமனம் செய்வதாகவே தோன்றிற்று.

ஃ கடைசி கடைசியாக நேருஜியையும் தரி சித்துவிடுவோம். இம்மாதம் பத்தாம் தேதி நம் நிருபர் அவரைக் கண்டபோது கவலைக் கோடுகள் நிறைந்து வலை பின்னிய முகமும், சற்றே வீங்கிய கன்னமும், புடைத்த நாசியும், உப்பிய வலது கையுமாக அவர் காணப்பட் டார். ஆனால் இப்போது...? ஒரு குறை பாடில்லை. முகத்தில் ஒளி வீசுகிறது. அவர் நாளும் கொண்டாடிய புத்தர் பிரானின் முகத்தில் காணப்படும் அமைதி இங்கும் துலங்குகிறது. வாழ்நாள் முழுதும் போராட் டத்தையே கண்டிருந்த பண்டிட்ஜி மரணத் தில்தான் அமைதியைக் கண்டாரா?

# இளைய பாரதத்தினர்



கே. பாலசந்தர்

"பெண்கள் இல்லாமல் ஒரு நாடகம் நடத்த முடியுமா?"

"அது விஷப் பரீட்சை. அமெச்சூர் நடிகர்கள் அதைக் கைக்கொள்ளலாமா?"

"அம்மாதிரி நாடகம் நடத்தலாம். ஆனால் ரசிகர்கள் வர மாட்டார்கள். அது வெற்றிகரமாக அமையாது!"

இப்படி அமெச்சூர் நடிகர்கள் வாக்குவாதங்களில் ஈடுபட்டிருக்கும்போது, இந்த வார்த்தைகளைப் பொய்யாக்கி, பெண் கதாபாத்திரம் இல்லாமலே ஒரு நாடகத்தை வெற்றிகரமாக நடத்திச் சபையோரின் பாராட்டுதல்களைப் பெறலாம் என்று சாதித்துக் காட்டியவர் இளைஞர் திரு கே. பாலசந்தர். 'மேஜர் சந்திரகாந்த்' என்ற அந்த நாடகத்தை இன்று சென்னை நகரில் நடத்தாத சபாக்கள் இல்லை; பார்க்காத ரசிகர்கள் இல்லை என்று கூறிவிடலாம்.

மேஜர் சந்திரகாந்துக்கு இரு புதல்வர்கள். ஒரு பையன் இன்ஸ்பெக்டர்; மற்றொரு பையன் தத்தாரி. அந்தத் தத்தாரிப் பையன் தெருவில் பெண்ணைக் காதலித்து, கடைசியில் அவன் தொலை செய்யப்படுகிறான். இதைக் கண்டு ஆத்திரமுற்ற அந்தப் பெண்ணின் சகோதரன் அந்தத் தத்தாரியைத் தீர்த்துக்கட்டி விடுகிறான். பிறகு அவன் மேஜர் சந்திரகாந்திடமே அவர் யாரென்று தெரியாமல் அடைக்கலம் அடைகிறான். அதற்குப் பிறகு பல உணர்ச்சிப் போராட்டங்கள். நீதிக்கும் கடமைக்கும் நிகழ்ந்த போராட்டத்துக்குப் பிறகு நீதி நிலை நாட்டப்படுகிறது.

"பெண்களைப் பற்றி இந்நாடகத்தில் சம்பாஷணையில்தான் வருமே ஒழிய கதாபாத்திரமாக அவர்கள் வரவில்லை. இது ஒரு விஷப் பரீட்சைதான். வெற்றி பெறுமா என்று முதலில் சந்தேகமாகத்தானிருந்தது. ஆனால் மாறுதல் விரும்பும் மக்கள் இந்நாடகத்தை ஏற்றுக் கொண்டு பாராட்டியது எனக்கு இன்னும் பல புது முயற்சிகளுக்கு ஊக்கம் அளித்தது!" என்றார் திரு கே. பாலசந்தர் தம் அநுபவங்களை எடுத்துரைக்கும் போது.

அக்கௌண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்தில் இவருக்கு சூபரின்டெண்ட் உத்தியோகம். 'அக்கடா!' என்று சர்க்கார் உத்தியோகத்தைப் பார்த்துக் கொண்டு இந்த மனுஷன் சும்மா இருக்கக் கூடாதோ? இப்படி நல்ல அருமையான நாடகங்களை எழுதி, டைரக்ட் செய்து, சிரமப்பட வேண்டும், புகழ்பெற வேண்டும் என்று அவர் தலையில் எழுதியிருக்கிறது. அதை மாற்றி அமைக்க முடியுமோ?

"ஏன் ஸார்! நீங்கள் நாடகங்கள் எழுதித் தயாரித்து ஒத்திகைகள் நடத்து வதில் வீட்டுப் பக்கம் எட்டிப் பார்ப்பது கஷ்டமாக இருக்குமே? இதற்கு ஹோம் டிபார்ட்மெண்ட் அநுமதி அளித்திருக்கிறதோ?"

"அமெச்சூர் நடிகர்கள் எல்லாருக்குமே இந்தச் சிரமம் இருக்கத்தான் செய்யும். அவர்கள் வெளியில் நாடகமாடிவிட்டு வந்தால் வீட்டிலும் ஒரு நாடகத்துக்குத் தயாராகக் காத்திருக்க வேண்டும். இது நிஜ நாடகம். அழுகை... கண்ணீர்.... கோபம்!"

"இதை நீங்கள் எப்படிச் சமாளித்தீர்கள்? தங்கள் குடும்ப நாடகத்தை எப்படிச் சரிக்கட்டினீர்கள்?"

"நான் சரிக்கட்டினேனா? நாளாக நாளாக என் மனைவி சரிக்கட்டிக்கொண்டு விட்டாள். இப்பொழுது என் மனைவி, 'அந்த நாடகம் என்ன ஆச்சு? இன்னும் புதிய நாடகம் எழுதி முடிக்கவில்லையா?' 'ஒத்திகைக்கு, நேரமாச்சு. புறப்படுங்கள்!' என்று என்னை டைரக்ட் செய்கிறாள்!"

கணவன் எவ்வழி அவ்வழி மனைவியும்! பிறகு அவர் வெற்றிக்குக் கேட்பானேன்?

காவிரிப் பாசனத்தின் காரணமாக நெற்களஞ்சியமாகவும், கலைக் களஞ்சியமாகவும், திகழும் தஞ்சை மண்ணில் நன்னிலத்தில் விளைந்த அருமையான பயிர் இது. நன்னிலம் போர்டு ஹைஸ்கூலில் கல்வி கற்று, அண்ணாமலை சர்வகலாசாலையில் பி. எஸ்ஸி. பட்டம் பெற்றார் பாலசந்தர். இவர் பெற்றது விஞ்

மேஜர் சந்திரகாந்தில் ஒரு காட்சி



ஞானப் பட்டம். தொழில் அக்கௌண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்தில் கணக்கர் வேலை; பொழுதுபோக்கு நாடகம் எழுதுவது; டைரக்ட் செய்வது. விசித்திரமாக இல்லையா?

"உங்களுக்கு நாடகம் எழுத வேண்டும் என்ற ஆர்வம் எப்படி ஏற்பட்டது?"

"அண்ணாமலை சர்வகலாசாலையில் மாணவர்களுக்குக் கலைத் துறையில் ஆர்வம் இருந்திருப்பதில் ஆச்சரியமில்லைதானே? ஹாஸ்டலில் நான் அன்று பல நாடகங்களைத் தயாரித்து வழங்குவோம். அதிலிருந்து அந்த ஆசை என்னைப் பற்றிக் கொண்டு விட்டது..."

"தொழில் துறையில் புகுந்த பிறகும் அந்த ஆசை தங்களை விடாமல் பற்றிக் கொண்டிருப்பது ஆச்சரியம்தான்!"

"ஆபீசு, வீடு என்று மனித யந்திரமாக மாறாமல் இப்படிக் கலைத் துறையில் ஈடுபட்டு நிம்மதி காண்கிறேன். முதலில் இந்தியன் நேஷனல் ஆர்ட்டிஸ்ட் குழுவில் நடிகனாகவும் நாடகாசிரியனாகவும் பணியாற்றினேன். 'சதுரங்கம்' நாடகத்தைத் தயாரித்துக் கொடுத்தது நான்தான். பூவாளூர் சுந்தரராமனின் 'கௌரி கல்யாணம்' கதையை நாடகமாக்கிக் கொடுத்தது நான்தான்!"

"அப்படியா? ராகினி ரிக்ரியேஷனில் அதன் பிறகுதான் சேர்ந்தீர்களோ?"

"ஆமாம்! என் நண்பர்கள் சிலர் 'ராகினி ரிக்ரியேஷன்ஸ்' அமெச்சூர் நாடகக் குழு ஆரம்பித்து, புது நாடகம் எழுதவும், அதை டைரக்ட் செய்யவும் பணித்தார்கள். அதில் தயாரான 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்தைப் பார்க்க வந்த நாகேஷ் தானும் இந்த நாடகத்தில் பங்கு பெற வேண்டும் என்று தம் விருப்பத்தைத் தெரிவித்தார். அவர் நடிப்புக்கேற்ற முறையில் தயாரித்த நாடகம் தான் 'சர்வர் சுந்தரம்!'"

"ஒரு நடிகரின் திறமை சுடர் விட்டுப் பிரகாசிக்கும்படி, அவர் குண நலனுக்கேற்ப ஒரு நாடகம் தயாரித்தளித்தால், நிச்சயம் வெற்றி கிட்டும் என்பது 'சர்வர் சுந்தர'த்தில் தெரிந்தது. அது சரி! உங்கள் நாடகத்தின் வெற்றிக்கு அடிப்படைக் காரணங்கள் என்னவென்று தெரிந்து கொள்ளலாமா?"

"அலுத்துப்போன 'முக்கோணக் காதல்' கதைகளை விட்டு விட்டுப் புதுத் திருப்பங்களுள்ள கதைகளையே நாடகமாக்கி வருகிறேன். நீதி, கடமைப் போராட்டங்களை அடிப்படையாகக் கொண்டு 'மேஜர் சந்திரகாந்த்' உருவாகியது. அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு என்பார்கள். தாய்ப் பாசத்தை நிலைக்களனாகக் கொண்டு 'மெழுகு வர்த்தி' தயாராகியுள்ளது. மேலும் என் நாடகங்களை முதலில் என் அக்கௌண்டெண்ட் ஜெனரல் காரியாலயத்தில் அரங்கேற்றி அவர்களது மன மாறுதல்களுக்கேற்ப நாடகங்களை மெருகேற்றுகிறேன். 'சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்' அல்லவா? என் நாடகங்களும் மேடை ஏற ஏற மெருகேறுகின்றன" என்றார் பாலசந்தர்.

'முக்கோணக் காதல்' கதைகளை விட்டு விட்டுப் புதிய கோணத்தில் புதிய பாதையில் தம் நாடகங்களைத் தயாரித்தளிக்க வேண்டும் என்ற அவர் முயற்சிக்காகவே, ஆசைக்காகவே இளைய பாரதத்தினர் பாலசந்தரை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம். அவரது புது முயற்சிகள் அவருக்கு நிச்சயம் புகழும், பெருமையும் தேடித் தரும் என்பது நிருபணமாகி வருகின்றன.

— குண்டுமணி

## ரசிகர் நேருஜி

நேருஜி சிறந்த ரசிகர். இயற்கை அழகையும், கலை அழகையும் காணத் தெரிந்தவர். 'இளசான அழகுகளைத் தேடி ரசிப்பதில் அவரிடம் ஒரு பெண்மையே இருந்ததாகச் சொல்லலாம்' என்கிறார் ஃப்ராங்க் மொரேஸ்.

எதுவுமே உபயோகமாக இருந்தால்மட்டும் போதாது. அழகாகவும் இருக்க வேண்டும் எனக் கருதியவர் நேருஜி. அவர் பல கட்டிடங்களைத் திறந்து வைத்தபோது இதைச் சொல்லத் தவறியதில்லை. பழைய புதிய கலை நுணுக்கங்களை இணைத்தே கட்டிடங்கள் எழுப்ப வேண்டும் என்பார் அவர். ஒரு முறை எஞ்ஜினீயர்கள் சங்கமொன்றின் அலுவலக அமைப்பைப் பார்வையிட்ட நேருஜி "இதென்ன வத்திப் பெட்டி மாதிரி?" என்று எரிச்சலாகக் கேட்டார். அதன் பின்னர் கட்டிடத்தில் மாறுதல்கள் செய்யப்பட்டன.



வரலாற்று நிபுணராகிய நேருஜிக்குப் புராதனச் சின்னங்களைப் பாதுகாப்பதில் அளவற்ற ஈடுபாடு உண்டு. ஒருமுறை அவர் டில்லியில் காரில் சென்று கொண்டிருந்தபோது தர்யா கஞ்ஜுக்கும் புது டில்லிக்கும் நடுவே உள்ள சுவரைச் சுற்றித் தொழிலாளிகள் பரபரப்பாயிருப்பதைக் கண்டார். வண்டியை நிறுத்தி, விஷயம் என்ன என்று விசாரித்தார். மேலிடத்து உத்தரவுப்படி சுவரை இடிக்க இருப்பதாகத் தொழிலாளர்கள் கூறினார்கள். பழைய சின்னங்களை இவ்வளவு அலட்சியமாகவா தகர்ப்பது என்று நேருஜிக்கு ஆத்திரமே வந்து விட்டது. உத்தரவிட்ட அதிகாரி யார் என்று கண்டறிந்து, தாம் வீட்டுக்குத் திரும்பியவுடன் அவரை வரவழைத்து உத்தரவை மாற்றிய பின்தான் நேருஜி நிம்மதி அடைந்தார்.

இவ்வாறே மற்ற துறைகளிலும் நம் புராதனப் பண்பாட்டை அவர் மதித்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று ஆசைப்பட்டவர்கள் பலர்.



# ஆளப்பிறந்தவன்

கதை: ராஜு  சித்திரம்: வினு



உங்களையெல்லாம் இப்போது நீண்ட நெடுங் காலத்துக்கு முன்னாலே கூட்டிக் கொண்டு போகப் போகிறேன்.

மங்களபுரி என்ற நகரை அடுத்ததொரு கிராமத்தின் ஆற்றங் கரையினிலே....










டேய் மோகன்! இதோபார், ஒரு நொடியில் உன்னை விட வேகமாக வருகிறேன்!
வா... வா வேகமாக வா...


கிராமச் சிறுவர்களின் களங்கமற்ற விளையாட்டை இரு கொடிய கண்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றன.


வீறாப்புப் பேசிய குப்பன் நட்டாற்றில் தொப்பென்று விழுகிறான்.
ஹா... ஹா டேய் குப்பா வேகமாக வா!


குப்பன் மனத்தில் பொறாமை வளர்கிறது.
இந்த மோகன் பயலே என்ன செய்கிறான் பார்!
தம்பி! அந்த மோகன் யார்?


யாரோ ஒரு அநாதை. அப்பா அம்மா யாருன்னு கூடத் தெரியாது. பெரிய பலசாலியாம்... எல்லாம் சும்மா!
அந்த இருவரில், மோகன் யார் என்பதை எனக்குக் காட்டுவாயா தம்பி.


கொஞ்சம் அழகா, சிரிச்ச முகமா இருக்கானே அவன் தான் மோகன். நாளைக்கு நீங்க அந்தப் பிள்ளையார் கோயில் பக்கம் வந்தீங்கன்னு மோகனை நானே உங்களுக்குக் காட்டித் தரேன்.


தம்பி, நாளைக்கு நீ எனக்கு மோகன் யார் என்பதைக் காட்டினால் இன்னும் நிறையப் பொருள் தருவேன்.


மறு நாள் ஆற்றங்கரைப் பிள்ளையார் கோயில் அருகே....
நான் அவர்கள்கிட்டே போய் ஒரு பையனை இறுக்கக் கட்டிக்கொள்ளுவேன். அவன்தான் மோகன். தெரிந்ததா?


டேய், இப்பன்டோய்...!
இப்பா! நேத்து ஆத்துலெ விழுந்தியே மூழ்கிட்டேன்னு நெனைச்சேன்.


டேய்! இப்பா இது என்னது விடுடா...
எங்கே விடுவித்துக் கொள் பார்க்கலாம் உன் திறமையை..


இதே சமயத்தில் பல வீரர்கள் குதிரைகளில்......


மோகனைக் காட்டிக் கொடுத்த இப்பன் ஒளிந்திருந்து பணமுடிப்பைப் பெறுகிறான்.
தொடரும்

"ஒரே ஒரு வழி இருக்கிறது. ஹங்கேரியிலிருந்து நீ ஒரு ஆஸ்திரியனாகத் தப்பிச் செல்ல வேண்டும். அதற்கு வேண்டிய துணிவிருக்கிறதா உன்னிடம்?'' என்று கேட்டான் என் நண்பன்.

என்னால் அது முடியுமா? அத்தகைய துணிவு என்னிடம் இருக்கிறதா என்று என்னையே நான் கேட்டுக் கொண்டேன். எப்படியும் நான் என்னுடைய தாய்நாட்டை விட்டு ஓடித்தாளுக வேண்டும். இரண்டாவது உலக யுத்தத்தின்போது ஹிட்லருக்கு எதிராகப் போரிட்ட நாடுகளுக்கு (Allies) உளவாளியாக நான் புடாபெஸ்டில் வேலை செய்து வந்தவன். இப்போதோ யுத்தத்துக்குப் பின், ஹங்கேரி ரஷ்யர்களிடம் வந்து விட்டது. அவர்களுக்கு எதிராக நான் வேவு பார்க்கலாம் என்ற சந்தேகத்தின் மீது எந்த விநாடியும் என்னை அவர்கள் கைது செய்யக் கூடும். நான் தலை மறைவாக ஒளிந்து வாழும் வீட்டுக்கு என் நண்பன் வந்தான். இன்னும் பத்து நாட்களில் ஆஸ்திரிய அகதிகளை ஏற்றிக் கொண்டு புடாபெஸ்டிலிருந்து வியன்னுவுக்குக் கிளம்பப் போகும் ரயில் வண்டியைப் பற்றிய தகவல்களுடன் அவன் வந்திருந்தான். "அந்த ஆஸ்திரிய அகதிகள் ஜாபிதாவில் உள்ள ஒரு நபர் வரப் போவதில்லை. ஒருவேளை அவன் இறந்திருக்கலாம். அவன் ஒரு சித்திரக்காரன். மனிதர்களை உயிரோவியமாக வரையும் கலையில் வல்லவன். ஆஸ்கார் வின்னர் என்பது அவன் பெயர். அவனுக நீ நடிக்க வேண்டும்'' என்று தனது திட்டத்தை என்னிடம் விளக்கினுன் நண்பன்.

மகிழ்ச்சியோடு நான் இதை ஏற்றுக் கொண்டேன். பிரெனக் லாஸ்லோவாகிய நான் ஆஸ்கார் வின்னர் ஆனேன். பாஸ்போர்ட் விஷயம்? அதற்காக நான் அதிகம் கவலைப்பட வேண்டியிருக்கவில்லை.

1946ல் புடாபெஸ்டில் வெகு சிலரிடமே இத்தகைய பாஸ்போர்ட் இருந்தது. ஹங்கேரியர்கள் வெளிநாடு செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. எப்படியும் ஒரு பாஸ்போர்ட்டை எனக்கு வின்னர் பெயரில் கொண்டு வருவதாக என் நண்பன் வாக்களித்தான். பிறகு என் நண்பன் டைப் செய்த சில காகிதங்களை என்னிடம் கொடுத்தான். அதில் ஓவியன் வின்னரின் வாழ்க்கைக் குறிப்புகள் அடங்கியிருந்தன.

"இந்த விநாடியிலிருந்து நீ சித்திரக்காரன் ஆஸ்கார் வின்னராகி விட்டாய். அமைதியாக உட்கார்ந்து இதில் உள்ள குறிப்புக்களைக் கவனமாகப் படி: ஒவ்வொரு சிறு அசைவிலும் நீ வின்னராகவே ஆகிவிட



# உன் பெயர்

வேண்டும்'' என்று உத்தரவிட்டான் என் நண்பன்.

நண்பன் கொடுத்த குறிப்புக்களை அதுரத்தோடு பார்த்துக் கொண்டிருந்த போது நண்பன் அவைகளின் மீது தனது கைகளால் தட்டியபடி சொல்லலானான்: ''அகதிகளை ஏற்றிச் செல்லும் ரயில் வண்டியை ஆங்காங்கே நிறுத்தி ரஷ்ய ராணுவ அதிகாரிகள் வண்டியினுள் புகுந்து பிரயாணிகளைச் சோதனை யிடுவார்கள். பிரயாணம் செய்யும் அகதிகளின் பெயர் முதலிய குறிப்புக்களடங்கிய இந்தப் பிரதியின் ஒரு நகல் ரஷ்ய அதிகாரிகளிட மிருக்கிறது. உன்னை அவர்கள் கேள்விகளால் துளைத்தெடுக்கக் கூடும். அகதிக் கூட்டத்தின் தலைவனிடமும் இதன் ஒரு பிரதி உள்ளது. அவனுக்கு வின்னரைத் தெரியாது. ஆனால் ரயில்வே ஸ்டேஷனில் வின்னரின் பெயர் கூப்பிடப்படும். ஆஜர் என்று நீ பதில் உரைக்கு முன் கொஞ்ச நேரம் தாமதிக்க வேண்டும்.''

''தாமதிப்பானேன்?'' என்று கேட்டேன்.

''உண்மையான வின்னர் ஒருவேளை கடைசி நிமிஷத்தில் தோன்றினாலும் தோன்றக்கூடுமல்லவா? இரண்டு பேர் 'ஆஜர்' என்று கூறி முன்னால் போனால் உண்மையான வின்னர் அல்லாத நபருக்குத் தொல்லைகள் நேரக்கூடுமல்லவா? அதனால்தான் கொஞ்ச நேரம் தாமதித்து நீ உன்னை வெளிப்படுத்திக் கொண்டு முன்னே செல்ல வேண்டும்'' என்று விளக்கினான் நண்பன்.

யும் ஒரு யுகமாக வளர்ந்துகொண்டிருந்தது. திடீரென்று ஸ்டேஷனில் உள்ள ஒலிபெருக்கி கரகரத்தது. என் இதயத்தின் துடிப்பு அருகிலிருப்போருக்குக் கேட்டுவிடுமோ என்று தவித்துப் போனேன். அப்படி வேகமாக அடிக்கலாயிற்று. கம்பீரமான குரலொன்று அகர வரிசைப்படி பெயர்களைக் கூப்பிடலாயிற்று. என்னுடைய வயிற்றுக்குள் குடலை யாரோ முடிச்சுக்களிடுவது போலிருந்தது. என்னுடைய பெயர் ஆங்கில எழுத்தின் கடைசி எழுத்தில் ஏன் ஆரம்பிப்பதாக இருந்தது? பெயர்ப் பட்டியல் படிக்கப்பட்ட பிளாட்பாரத்தில் இருந்த கூட்டம் குறையலாயிற்று. என் கைகளின் நடுக்கத்தை மறைப்பதற்காக நான் அவைகளைக் கால்சராயின் பக்கவாட்டுப் பைகளில் ஆழமாக நுழைத்து மறைத்துக் கொண்டேன்.

கடைசியாக....

''வின்னர்.. ஆஸ்கார் வின்னர்...'' என்று ஒலிபெருக்கி முழங்கியது.

''இதோ இருக்கிறேன்'' என்று கூச்சலிடத் துடித்தது என் நாக்கு. ஆனால் நண்பன் கூறியபடி பொறுமையாகக் காத்திருந்தேன். என் இதயம் ரோடு இஞ்சினைப் போலச் சத்தமிட்டது. காதுகள் மிக மிகக் கூர்மையாகிச் சிறு ஓசையையும் உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தன. உள்ளமோ 'ஆண்டவனே! உண்மையான வின்னர் வரக் கூடாது. என்னைத் தவிர வேறு யாரும் அந்தக் குரலுக்குப் பதிலளிக்க முன்வரக் கூடாது' என்று உருகிக் கொண்டிருந்தது.

''வின்னர்..?'' இரண்டாவது முறை அந்தக் குரல் முழங்கியது—சற்று எரிச்சலுடனே.

# என்ன?

## உண்மைக் கதை

அதன் பின்னர் ஒவ்வொரு விநாடியையும் வின்னரைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புக்களைப் படிப்பதிலேயே நான் செலவிடலானேன். என்னை மறந்து நான் வின்னராகவே ஆகும்வரை அந்தக் குறிப்புக்களை மனப்பாடம் செய்தேன். கிராஸ் என்ற ஊரில் வின்னர் பிறந்திருந்தான். அவனது வீட்டைப் பற்றிய சிறு தகவல்களையும் என்னால் குளறுபடி இல்லாமல் கூறமுடியும். வின்னர் எங்கே படித்தான், அவனது பழக்க வழக்கங்கள், குண விசேஷங்கள், அவனது விருப்பு வெறுப்புக்கள் சகலத்தையும் பற்றி அறிந்து கொண்டு விட்டேன்.

அன்று காலை.

என்னுடைய பெயர் கூப்பிடப்படுவதை எதிர்பார்த்து நான் ரயில் நிலையத்தில் நின்று கொண்டிருந்தேன். உள்ளத்திலே தவிப்பிருந்தாலும் அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல் ரொம்பச் சிரமப்பட்டு இயற்கையாக எதையும் எதிர்பாராதவனைப் போல இருக்க முயன்று கொண்டிருந்தேன். ஆர்வம், பயம், துடிப்பு ஆகிய எதுவும் நிலைமையைச் சர்வ நாசமாக்கிவிடும் என்பதை நான் அறிவேன். ஆனால் ஒவ்வொரு விநாடி

நான் முன்னால் நகர்ந்தேன். ''இதோ இருக்கிறேன்'' என்று அமைதியாகப் பதிலளித்தேன் அதிகாரியின் முன்னால் போய். உண்மையான வின்னர் வரவில்லை. எல்லாம் நல்லபடியாகவே முடிந்தது. நாங்கள் எல்லோரும் பத்துப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு வண்டியின் பல பெட்டிகளுக்குள் திணிக்கப்பட்டோம்.

பிளாட்பாரத்திலிருந்து ஊதுகுழலின் ஒலி கேட்டது. என் பிரமையோ என்னவோ, அது நடுங்குவது போல் இருந்தது. வண்டி கிளம்புவதற்கான சமிக்ஞைகள் கொடுக்கப்பட்டன. திடீரென்று வண்டியின் கோடியில் ரஷ்ய மொழியில் பேசும் ஒலி கேட்டது. நான்கு ரஷ்ய அதிகாரிகள் எங்கள் கம்பார்ட்மெண்டுக்கு அடுத்த பெட்டிக்குள் ஏறிக் கொண்டார்கள். அங்கிருந்த சிலரை அதிகாரத்துடன் நடைபாதையில் போய் நிற்கும்படி கூறிவிட்டு அவர்கள் இருந்த ஆசனங்களில் அமர்ந்து கொண்டு அட்டகாசமாகச் சிரித்துச் சம்பாஷிக்கலானார்கள்.

ஸ்டேஷனைத் தாண்டிய வண்டி வேகமெடுக்க ஆரம்பித்தபோது நான் ஜன்னல் வழியே வெளியே எட்டிப் பார்த்தேன். என் தாய்த்திருநாட்டை மறுபடி எப்போது காணப்

போகிறேனே என்ற வேதனை என் நெஞ்சை அடைத்தது. உடனே சட்டென்று நான் துக்க முகத்துடன் இருக்கக் கூடாது என்பதும் நினைவுக்கு வந்தது. 'நான் இப்போது ஆஸ்கார் வின்னர். என் தாய்நாடான வியன்னாவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன்' என்பதை நினைவுபடுத்திக் கொண்டேன்.

பெருத்த ஆரவாரத்துடன் வண்டி க்ளென் போல்டு என்ற ஸ்டேஷனில் நின்றது. இது முதல் சோதனை நிலையம். ரஷ்ய சோதனை இன்ஸ்பெக்டரும் ஒரு துபாஷியும் எங்கள் கம்பார்ட்மெண்டுக்குள் நுழைந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் ஆயுதம் தாங்கிய ரஷ்ய ராணுவ வீரர்கள் நடைபாதையில் நின்று கொண்டிருந்தார்கள்.

ரஷ்ய அதிகாரி உருவத்தில் சிறியவர். கடுகடுப்பான முகம். எனக்கு எதிரில் உட்கார்ந்திருந்த பெண்ணிடமிருந்து தமது விசாரணையைத் தொடங்கினார். அவளைப் பற்றித் தம்மிடமிருந்த குறிப்புக்களைப் பார்த்தபடி ரஷ்ய மொழியில் கேள்விகளைத் தொடுக்கலானார். அந்த ஆஸ்திரியப் பெண் புரிந்து கொள்வதற்காகத் துபாஷி அவைகளை ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்தார்.

அடுத்து என் அருகே ஜன்னலுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த மனிதனை விசாரிக்கலானார் அதிகாரி. என் இதயம் வெளியே துள்ளி விழுந்துவிடுவது போல் அடித்துக் கொண்டிருந்தது. என்னை விசாரணை செய்யும்போது நான் சொல்ல வேண்டியவைகளை மற்றுமொருமுறை மனத்துக்குள் சொல்லி ஒத்திகை பார்த்துக் கொள்ளலானேன். 'நான் ஒரு சித்திரக்காரன். நான் பிறந்தது கிராஸ் என்ற நகரத்தில். என் பெயர் — என் பெயர் — ஐயோ—!'

குப்பென்று வியர்வை வெள்ளமாகப் பெருகியது. நெற்றியிலிருந்து ஒன்று சேர்ந்து என் கன்னத்தில் வழியலாயிற்று. வேகமாக அடித்துக்கொண்டிருந்த இதயத் துடிப்பு சட்டென்று நின்று விட்டது போன்றதொரு பிரமை. நான் யாராக நடித்தேனோ அவனைப் பற்றிய எல்லா விஷயங்களும் நினைவிருந்தன. —அவனது பெயரைத் தவிர.

''கடவுளே! — என்னுடைய பெயர் — அது என்ன? ஐயோ! ஆண்டவா! என் பெயரை எனக்கு நினைவுபடுத்த மாட்டாயா? நான் ஒரு சித்திரக்காரன். நான் பிறந்தது கிராஸ் என்ற ஊரில். என் பெயர்?'' ம்... பிரயோசனமில்லை. அந்தப் பெயர் நினைவுக்கே வரவில்லை.

திடீரென்று எனது கம்பார்ட்மெண்டின் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. நடைபாதையில் ஏதோ பேச்சுக் குரல். அடுத்து ஒரு ரஷ்ய கர்னல் தனது தலையை எங்கள் அறைக்குள் நீட்டினார்.

'வெர் ஸ்பீல்ட் ஸ்சாச்?' — செஸ் விளையாடுவதற்கு யாருக்குத் தெரியும்? — என்று தமது கனமான குரலில் மட்டமான ஜெர்மன் மொழியில் கேட்டார் அவர்.

விசாரணை அதிகாரி குரலைக் கேட்டுத் திரும்பினார். வாசல்படியில் ஒரு கர்னல் நிற்பதைக் கண்டதும் மரியாதையாக ஒதுங்கிக்கொண்டு வழிவிட்டார். கதவுக்கு அருகே நான் உட்கார்ந்திருந்ததால் உள்ளே அடியெடுத்து வைத்த கர்னல் என்னைக் கேட்டார். ''ஸ்பீலென் ஸீ ஸ்சாச்? — உனக்கு செஸ் விளையாடத் தெரியுமா?''

நான் செஸ் விளையாடிப் பத்து வருஷங்களுக்கு மேலாகி விட்டன. ஆனால் இப்போது அது முக்கியமல்ல. இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்கக் கடவுளாகப் பார்த்து அனுப்பிய உதவி இது. அந்தக் கம்பார்ட்மெண்டில் வேறு யாரும் பேசவேயில்லை.

''ஜா இச் ஸ்பீலெ ஸ்சாச் — ஆம். நான் செஸ் விளையாடுவேன்'' என்றேன். உடனே அந்தக் கர்னல் தம்மைப் பின்தொடருமாறு பணித்தார்.

ரஷ்யர்களின் கம்பார்ட்மெண்டில் வேறு இரண்டு கர்னல்களும் ஜெனரலும் இருந்தனர். பூதாகாரமான சரீரத்துடன் இருந்த ரஷ்ய ஜெனரலின் நிமிர்ந்த மார்பை ஏராளமான பதக்கங்கள் அலங்கரித்தன. அந்த ஜெனரல் தான் செஸ் விளையாட விரும்பியவர்போலும். என்னை அழைத்து வந்த அதிகாரிக்கு உபசாரமாக நன்றி தெரிவித்த அவர் எதிரிலிருந்த ஆசனத்தில் என்னை அமருமாறு செய்தார்.

வண்டி நகர்ந்தது. ஜெனரல் ஒரு செஸ் பலகையை எங்கள் இடையே வைத்துக் காய்களை அடுக்கலானார்.

'என் வாழ்க்கையின் விளையாட்டு இது. ஆகவே நன்றாக விளையாட வேண்டும். ஆனால் விளையாட்டில் நான் வெற்றியடையக் கூடாது' என்று உறுதி செய்து கொண்டேன். ரஷ்யர்கள் செஸ் விளையாட்டில் தோற்றுப் போவதை விரும்பாதவர்கள்.

நாங்கள் விளையாடினோம். செஸ் விளையாட்டின் சில நெளிவு சுளிவுகள் மறுபடியும் எனக்குத் தானாகவே கைவரலாயின. மற்ற ரஷ்ய அதிகாரிகள் எங்கள் விளையாட்டை மரியாதையோடு மௌனமாகக் கவனித்து வந்தார்கள். செஸ் ஆட்டத்தில் தங்கள் ஜெனரல் மகா சூரர், ஒரு மந்திரவாதி என்றே அவர்கள் நினைத்தார்கள். உண்மையிலேயே அவர் நல்ல ஆட்டக்காரர்தான். ஆனால் அவர் நன்றாக விளையாட நானும் அவருக்கு வேண்டுமென்றே பல சந்தர்ப்பங்களை உண்டாக்கிக் கொடுத்தேன்.

நேரம் பறந்து கொண்டிருந்தது. அந்த ஓடும் வண்டியைப் போல. திடீரென்று வண்டியின் வேகம் குறையலாயிற்று. அடுத்த சோதனை நிலையத்தில் வண்டி நிறுத்தப்பட்டது. மறுபடியும் என் உள்ளம் ஓட்டப் பந்தயத்துக்குத் தாவிற்று. கம்பார்ட்மெண்டின் கதவு மெள்ளத் திறக்கப்பட்டது. எங்கள் குரூப்பின் சூபர்வைசர் உள்ளே நுழைந்தார்.

''இந்த மனிதனை இன்னும் விசாரணை செய்யவில்லை'' என்றார் அவர் அழுத்தமாக. ஜெனரல் எழுந்திருந்தார். ஒரு வார்த்தையும் பேசவில்லை. கரடியினுடையதைப் போன்ற தம்முடைய பெரிய உள்ளங் கையை விரித்து அந்த சூபர்வைசரின் மார்பிலே பதித்து வேகமாக நடைபாதையை நோக்கித் தள்ளினார். நிலைதடுமாறி வெளியே போய் அவர் விழுந்ததும் அறைக் கதவை அறைந்து சாத்திக்கொண்டு செஸ் பலகையைச் சுட்டிக்

காட்டி 'தவாய் மாக்யார்—ஹங்கேரியனே, உன் முறை. காயை நகர்த்து'' என்று கூறி உட்கார்ந்து கொண்டார் ஜெனரல்.

ஹங்கேரியன்! உண்மைதான். நான் ஹங்கேரியிலிருந்துதான் வருகிறேன். வாய் தவறி வந்த வார்த்தைகளா இவை? அல்லது இந்த ரஷ்ய ஜெனரல் நான் ஆஸ்திரியன் அல்ல ஹங்கேரியன் என்று சந்தேகிக்கிறாரா? எப்படியானாலும் என் தலை மயிர் குத்திட்டு நிற்கலாயிற்று. இதன் பிறகு இரண்டொரு தடவை நான் ஜெனரலைப் பார்த்தபோது என்னையே அவர் ஏதோ ஒரு தினுசாக விநோதமாகப் பார்ப்பது போலிருந்தது. ஆனால் நான் கவனித்த ஒவ்வொரு தடவையும் அவர் தமது பார்வையை சட்டென்று செஸ் போர்டில் பதித்துக் கொண்டார்.



முதல் ஆட்டத்தில் ஜெனரலுக்கே வெற்றி. ஆட்டம் முடிந்ததும் என்னை அழைத்து வந்த கர்னலிடம் ஏதோ கூறினார். அவன் அதை மொழிபெயர்த்து எனக்குக் கூறினான். ''நீ ஆடும் முறை ஜெனரலுக்குப் பிடித்திருக்கிறது. ஆகவே அவர் உன்னுடன் இன்னொரு ஆட்டம் விளையாடுவார்.''

எனக்கு அந்த ஆட்டத்தில் புதிய உற்சாகம் ஏற்பட்டது. வெற்றியின் விளிம்பில் வந்துவிட்டேன். ஆட்டத்தின் கடைசிக் காய்களை நகர்த்திக் கொண்டிருக்கும்போது ஆஸ்திரிய நாட்டின் எல்லைக்கு வந்த வண்டி தனது வேகத்தைக் குறைத்து நின்றது. வெற்றியா, தோல்வியா? — செஸ் ஆட்டத்தில் மட்டுமல்ல. விலைமதிப்பற்ற எனது சுதந்திர விடுதலைக்குமாகத்தான்—இதை என் மனம் கேட்டது.

இந்தத் தடவை வண்டிக்குள் எல்லைப் பாதுகாப்பு வீரர்கள் பவனி பட்டாளமாக நுழைந்தார்கள். அவர்களுடன் பத்துப் பன்னிரண்டு ரஷ்ய வீரர்களுமிருந்தனர். கனரகத் துப்பாக்கி அவர்களின் தோளிலிருந்து தொங்கியது. காவலர் எங்கள் கம்பார்ட்மெண்டுக்குள் சகஜமாக எட்டிப் பார்த்து விட்டு அடுத்த பெட்டிக்குச் சென்றார்கள். அங்கு ஜெனரலினால் பிடித்துத் தள்ளப்பட்ட, கோபம் கொண்ட சூபர்வைசர், அதிகாரிகளுடன் உட்கார்ந்திருக்கும் ஆஸ்திரியனுடைய என்னைப் பற்றி ஏதோ கூறியிருக்கவேண்டும். காவல் வீரர்களில் ஒருவன் என்னைப் பற்றி அறிந்து கொள்ளத் திரும்பி வந்தான்.

உள்ளே நுழைந்த அவன் ஜெனரலுக்கு உரிய மரியாதையோடு சலாமிட்டு ஏதோ ரஷ்ய மொழியில் பேசியபடியே என்னையும் சுட்டிக் காட்டினான்.

மறுபடியும் என் மூளை பயத்தினால் உறைந்து போயிற்று. இந்தத் தடவை கட்டாயம் ஜெனரல் என்னை விசாரணைக்கு உட்படுத்தத்தான் போகிறார். என்னை அறியாமல் என் வாய் நான் ஒரு சித்திரக்காரன், என் பெயர் — என்று முணு முணுக்கலாயிற்று. ஆனால் ஆனால் — ஐயோ இப்போதும் அந்தப் பெயர் நினைவுக்கு வரவில்லை.

காவல் வீரன் பேசிக்கொண்டிருக்கும் போதே ஜெனரலின் முகம் வர வரச் சிவக்கலாயிற்று. காவல் வீரன் அவரிடம் என்ன சொன்னானோ எனக்குத் தெரியாது. ஆனால் அவன் கூறிய செய்தி ஜெனரலைக் கடுங் கோபத்துக்குள்ளாக்கியது என்பதை மட்டும் உணர்ந்தேன். அவர் என்னை ஒருமுறை பார்த்தார். அவர் கண்கள் அனலென ஜ்வலித்தன. எழுந்திருந்தார்.

''சரி, என் முடிவு நெருங்கி விட்டது. நாம் கண்டுபிடிக்கப்பட்டு விட்டோம்'' என்றே நான் நினைத்தேன்.

ஆனால் இந்தத் தடவையும் ஜெனரலின் அந்தக் கோபத்துக்குக் காரணம் ஆட்டத்தின் இடையே அவர்கள் குறுக்கிட்டது தான். அந்தக் காவல் வீரனை ஒரே தள்ளாக மூர்க்கமுடன் வெளியில் பிடித்துத் தள்ளினார்.

அவன் நடை பாதைச் சுவரில் போய் மோதிக்கொண்டு தடுமாறித் தள்ளாடி விழுந்தான். ஜெனரல் கதவைப் படாரென்று அடித்து மூடிவிட்டுத் தம் இருக்கைக்கு வந்தார். கோபத்துடன் ஏதோ வார்த்தைகளை உதிர்த்துக் கொண்டிருந்தது அவரது வாய். உட்கார்ந்தவர் செஸ் போர்டைப் பார்த்து 'தவாய் — நீ ஆடப்பா!'' என்றார்.

நின்றுபோயிருந்த ரத்த ஓட்டம் செயல்படத் தொடங்கிக் குபுகுபுவென்று என் இதயத்துள் புகுந்தது. அப்பா! அந்த விநாடி எத்தனை இன்பமாக இருந்தது? இனி யாருக்குமே அந்தப் பக்கம் வருவதற்குத் தைரியம் கிடையாது. யாருமே வரமாட்டார்கள், நிச்சயம். மகிழ்ச்சியால் நிறைந்தது மனம்—முதல் தடவையாக என் முகத்தில் புன்முறுவல் பூத்தது. வண்டி தனது வேகத்தை அதிகமாக்கிக் கொண்டு ஓடியது. ஆஸ்திரியாவுக்குள் பத்திரமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். செஸ் போர்டிலிருந்து தமது பார்வையைத் திருப்பிய ஜெனரல் என்னைப் பார்த்து முறுவலித்தார். பிறகு கர்னலிடம் ஏதோ கூறினார். அவன் அதை எனக்கு மொழிபெயர்த்துக் கூறினான். ''வியன்னாவில் மறுபடி ஜெனரலோடு விளையாடத் தாங்கள் வருவீர்களா என்று கேட்கிறார். உங்களை எங்கே சந்திக்கலாம் என்பதையும் அறிய விரும்புகிறார்.''

என் வாய் இயந்திரமாக இயங்கி வியன்னாவில் உள்ள பிரபலமானதொரு ஹோட்டலின் பெயரைக் கூறியது.

''உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்டான் கர்னல்.

பெயர்.....?

கொஞ்சமும் பதற்றமடையாமல் நிதானமாக ''என்னுடைய பெயர் ஆஸ்கார் வின்னர்'' என்று கூறினேன். இந்தச் சிறிய இரண்டு வார்த்தைகளை நான் எப்படி மறந்தேன் என்று அப்போது எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

(ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட் ஜூனியர் டிரஷரி)

# நீரோட்டம்

## எஸ். ரங்கநாயகி

### பதினெட்டாம் அத்தியாயம்

சீதாவுக்குப் பணம் அனுப்பத் தியாகு முனைந்தது எல்லாருக்கும் தவறுதலாகப்பட்டது.

"சீதாவுக்கு நீ பணம் அனுப்ப வேண்டிய காரணம்?" என்றார் ராஜு.

"நன்றாகக் கேளுங்கள் அப்பா!" சுசீலா இடையே குறுக்கிட்டாள்.

"அந்த..... பணம்.... வந்து.... சீதாவின்....." தியாகு தடுமாறினான்.

"ஏன் தயங்குகிறாய்?"

தியாகு சற்று மௌனமாக இருந்தான். பிறகு அவன் முகத்தில் கடுகடுப்பு காணப்பட்டது. "நான் சொல்ல முடியாது மாமா! இதற்காக நீங்கள் என்னை என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளுங்கள்...." திடமான பதிலாகக் கூறிவிட்டு மாடிப் படியேறினான் தியாகு.

ராஜு சினத்துடன் அவனை விழித்துப் பார்த்தார். பிறகு, "தியாகு! இது நல்லதற்கல்ல" என்று கூறிச் சென்றார்.

ராஜு சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குச் சென்று விட்டார். மாடிக்குச் சென்ற தியாகு கீழே இறங்கவேயில்லை. யசோதை மனம் வெந்து துடித்துக் கொண்டிருந்தாள்.

"சுசீலா! நீயாவது சென்று தியாகுவைச் சாப்பிடக் கூப்பிடேன்"— யசோதை கூறினாள்.

"நான் போகவில்லை. செய்த தவற்றை எடுத்துக் கூறினால் அவருக்குக் கோபம் வருகிறது.... நானும் எவ்வளவு நாட்கள்தான் பொறுத்து விட்டேன். இந்தப் பணம் விஷயமாக அவருக்கு வேலையும் போய் விடப் போகிறது. இதனால் அவர் மனம் மேலும் சிதறப் போகிறது. அவ்வளவுதானே! அதற்காக நான் பயப்படவில்லை சித்தி. நானே சம்பாதித்துக் குடும்பத்தை நடத்த எனக்குத் திறமை உண்டு, துணிவும் உண்டு...." சம்பந்தமில்லாமல் சுசீலா ஏதேதோ பேசினாள்.

யசோதை ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு குழந்தை கண்ணனை எடுத்துக் கொண்டு மெள்ள மாடிக்குப் போனாள்.

"தியாகு!"

தியாகு மெதுவாக யசோதையை ஏறிட்டு நோக்கினான்.

"தியாகு, எழுந்து குளித்து விட்டுச் சாப்பிட வா."

தியாகு பதிலே கூறவில்லை. முகத்தில் எல்லையற்ற துன்பம் பரவிக் கிடந்தது.

கண்ணன் அப்பாவிடம் தாவினான். அவனை வாங்கிக் கொண்டான் தியாகு. குழந்தை அவனை நோக்கிச் சிரித்தபோது அச்சிரிப்பில் கலக்க முடியாமல் அவன் கண்கள் கலங்கின.

"தியாகு! இந்தக் குழந்தைக்காகவாவது, வரும் அவமானத்தைத் தடுத்து உண்மையை உரைக்க வேண்டாமா நீ?" என்று மெள்ளக் கூறினாள் யசோதை.

"யசோதை! நீ ஒருத்திதான் என்னை நம்புகிறாய் என ஆறுதல் கொண்டேன். நீயே என்னைச் சந்தேகித்தால்......." தியாகுவினால் மேலே பேச முடியவில்லை.

"இல்லை, தியாகு! நான் உன்னை நம்புகிறேன். ஆனால் இக்கட்டான இந்த நிலையில் இருக்கும்போது நீ டிராப்டைப் பற்றின உண்மையைக் கூறிவிட வேண்டாமா?"

"கூற முடியாததும் இக்கட்டான நிலைதான் யசோதை! நாம் இதிகாசங்களைப் படித்தும், யோசியாமல் வாக்குக் கொடுப்பது எவ்வளவு தவறு, எவ்வளவு துன்பங்களை உண்டாக்கும் என்பதைப் புரிந்து கொள்ளாமலே இருக்கிறோம். எப்படியாயினும் சரி, கொடுத்த வாக்கைக் காப்பாற்றவே நான் விரும்புகிறேன். விதி சதி செய்து என்னைக் கைதிக் கூண்டில் நிறுத்தினாலும் நான் அதை ஏற்கத் தயார்....."

'கைதி' என்ற வார்த்தையைக் கேட்டதுமே யசோதையின் உடலெல்லாம் நடுங்கியது. அவள் போற்றும் தியாகுவுக்கா இந்தக் கஷ்டம்? தாங்கக் கூடாத

துயரம்....அவளால் அந்தக் காட்சியை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

''தியாகு! ஐயோ, என்னால் நினைக்கக்கூட முடியவில்லையே! கைதிக் கூண்டில் கைதியாக நீ நிற்பதை என்னால் பொறுக்க முடியாது.... தியாகு! கையில் மூவாயிரம் இருந்தால் கட்டி விடு.... இந்தக் கஷ்டத்தை நான் சகிக்கவே முடியாது......'' என்று யசோதை விம்மலுடன் கூறினாள்.

''முடியாது யசோதை. அப்படிச் செய்தால் நான் திருட்டை ஒப்புக்கொண்டதாக முடியும். அந்தக் கஷ்டத்தை ஏற்க நான் விரும்ப வில்லை. சிறைச்சாலைக் கஷ்டத்தைவிட மனசாட்சியை எதிர்ப்பது பெரும் கஷ்டம்'' என்று கண்டிப்பாகக் கூறி விட்டான்.

யசோதை அவனிடம் மன்றாடினாள். அவன் கேட்டுக் கொள்ள வில்லை.

கடைசியில் யசோதையின் கெஞ்சலில் சாப்பிட மட்டும் கீழே இறங்கி வந்தான். அன்று அவன் ஆபீசுக்குப் போக வில்லை. சாப்பிடும் போது அவன் கூறினான். ''யசோதை! இந்தக் குடும்ப அந்தகாரத்தை விட்டு விட்டு நான் எங்கேயாவது கண் காணாத இடத்துக்கு ஓடி விடத்தான் விரும்புகிறேன், ஆனால் 'பணத்தைத் திருடி விட்டுக் கண் மறைவாக ஓடி விட்டான்' என்ற அபவாதத்தை ஏற்க விரும்பாமல் தவிக்கிறேன்.''

யசோதை பதில் கூற வில்லை.

மாலை ராஜு வீடு திரும்பியதும் ஒருவருடனும் பேச வில்லை..... யசோதையும் அவருடன் பேச நடுக்க முற்றாள். பாங்க் டிராப்ட் விஷயத்தை அவன் ரகசியமாக வைத்திருக்கும்வரை தியாகுவைப் பற்றி அவள் எவ்விதம் சிபாரிசு செய்ய முடியும்?

ராஜு இரவு சாப்பாடு வேண்டாமெனக் கூறி விட்டார். தியாகு காலை சாப்பாட்டுக்குப் பிறகு ஒன்றுமே சாப்பிடவில்லை.

மணி ஏழும் அடித்து விட்டது. யசோதை கடைசியாக ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். சுசிலா சமையலறையில் படுத்துக் கிடந்தாள். ராஜுவை மாடிக்குப் போய்ச் சந்தித்தாள் யசோதை. ''நான் கோவிலுக்குப் போய் வருகிறேன்'' என்றாள்.

''இவ்வளவு நேரம் கழித்துத் தனியாகப் போவாயா?''-ராஜு கேட்டார்.

''அதனால் என்ன? வழியில் யாராவது துணை கிடைக்கும்'' என்றாள்.

ராஜு வாசற் கதவைத் தாளிடப் போனார். யசோதையின் கையில் ஒரு பை இருந்தது. அதில் என்ன என்று ராஜு கேட்கவில்லை. கோவிலுக்கான தேங்காய் பழமாக இருக்கலாம்.

வீதியை அடைந்து யசோதை பஸ் ஸ்டாண்டை அடைந்து தெற்கு மாட வீதி போகாமல் மேற்கு மாட



வீதியில் திரும்பி லஸ்லைக் கடந்து ரானடே லைப்ரரியை அடைந்தாள். அவள் எதிர்பார்த்தது போலவே உமாபதி லைப்ரரியிலிருந்து வெளியே வந்து கொண்டிருந்தார். அவரை வீட்டில் சந்தித்துத் தான் நினைத்து வந்த விஷயத்தைப் பேச அவள் விரும்பவில்லை. ராஜுவிடம் கூறினால் இதை ஏற்க மாட்டார் என்பதை அவள் அறிவாள். அவள் போவது தெரிந்திருந்தாலே தடுத்திருப்பார். கணவருக்குத் தெரியாமல் வருவது தவறுதான். ஆயினும் குடும்பத்தின் மானத்தைக் காக்கும் வேலையில் கணவரது சினத்தை அவள் பொருட்படுத்தவில்லை.

யசோதையை அங்கு பார்த்ததுமே உமாபதி திடுக்கிட்டார்.

''நீங்கள்.... இந்த வேளையில்....''

''ஆமாம் மாமா! ரொம்பவும் முக்கியமான விஷயம். கொஞ்சம் எதிர்ப் பக்கம் வருகிறீர்களா?''

அங்கு வாசலில் மொபைல் போஸ்டின் கூட்டம் இருந்தது. அதனால் அவள் அங்கு பேச விரும்பவில்லை.

சாலையைக் கடந்து எதிர்ப்புறம் சென்றனர். பெட்ரோல் பங்குக்குப் பக்கத்தில் நிசப்தமாக இருந்தது... ''மாமா! உங்களுக்குத்தான் எங்கள் குடும்ப இருள் தெரியுமே!''

''ஆமாம்மா. ராஜு இன்றுகூடச் சொன்னான். ஏதோ பாங்க் டிராப்ட் வேறு இடையில் புகுந்திருக்கிறது. ராஜு வந்து போன பிறகு எனக்கு ஒரு யோசனை தோன்றியது. கீதா கல்கத்தா ஆபீசில் சம்பளம் வாங்கச் சென்றிருப்பாளோ என்று சந்தேகம். ஏனெனில் அவர்கள் ஆபீசில் மாற்றுக் கிளைகளில் சம்பளம் கொடுப்பது உண்டு. உடனே கல்கத்தா ஆபீசுக்குக் கீதாவின் பெயருக்கு டிரங்க் டெலிபோன் செய்தேன். அவள் கிடைத்து விட்டாள். விஷயத்தைக் கேட்டு அவள் துடிதுடித்து விட்டாள். ஆனால் போன் மூலம் அவள் ஒன்றும் கூற விரும்பவில்லை. உண்மையை விளக்க அவளே இன்று இரவு விமானத்தில் புறப்பட்டு நாளை வருவதாகக் கூறினாள். அவள் வந்தால் தான் விளக்கம் தெரியும்...''

யசோதை நன்றியுடன் அவரை நோக்கினாள். ''மாமா! எப்படியாயினும் தனக்கு அனுப்பப்படும் பணத்துக்கு மட்டுமே அவள் விளக்கம் தர முடியும். தியாகுவின்மீது அதிகாரி சுமத்தியுள்ள பழியை எப்படி நீக்க முடியும்...? அதனால் மாமா, இந்தாருங்கள், இந்தப் பையில் கிட்டத்தட்ட முப்பது பவுனுக்கு நகைகள் இருக்கின்றன. இதை விற்று ஆபீஸில் கொடுத்துக் காதும் காதும் வைத்தது போல் விஷயத்தை முடித்து விடுங்கள். நீங்கள் மாலை வேளையில் இப்போதெல்லாம் இங்கு வருவதாக உங்கள் நண்பர் கூறியிருக்கிறார்....அதனால்தான் இங்கு வந்தேன்'' என்று கூறிப் பையை அவரிடம் நீட்டினாள்.

உமாபதி திகைத்து நின்று விட்டார். ''ராஜுவுக்குத் தெரிந்தால்...?''

''நான் எப்படியாவது சொல்லிக் கொள்கிறேன். அவரிடம் பேச்செடுத்தால் இதற்கு இணங்க மாட்டார் என்றே உங்களிடம் கொடுக்கிறேன்... மாமா, உங்கள் நண்பரின் மருமகன் சுசீலாவின் கணவன், கண்ணனின் தந்தை கைதியாகக் கிடந்தான் என்ற அவப் பெயருடன் அவர்கள் முன் நிற்க நான் விரும்ப முடியாது. நான் செய்யும் காரியத்துக்காக உங்கள் நண்பர் என்னை ஏசி நடுத் தெருவில் வேண்டுமானாலும் தள்ளட்டும். ஆனால் அவர் குடும்பத்துக்கு அவமானமும் அவப் பெயரும் ஏற்படுவதை நான் விரும்பவே மாட்டேன்.... மாமா! எனக்காக இந்த ஓர் உதவியை மட்டும் செய்யுங்கள்....'' தவிதவித்து, கண்கள் நீர் பொழிய மன்றாடினாள் யசோதை.

உருகிவிட்டார் உமாபதி. பிறகு அவள் கையிலிருந்த அந்தப் பையை வாங்கிக் கொண்டார்.

காதிக் கடைக்குப் போக வேண்டுமென்றிருந்ததால் அங்கு உமாபதி நுழைந்தார். தன் நினைவு தெரியாமல் உள்ளத்தில் குமுறிய கொந்தளிப்புடன் யசோதை தெருவைக் கடந்தாள். 'க்ரீச்' என்ற சத்தம். 'ஐயோ!' என்ற அலறல். யசோதை நினைவு தப்பிக் கீழே விழுந்து விட்டாள். அவள்மீது ஒரு கார் ஏறி விட்டது.

**"ரா**ஜு! ராஜு!'' ஓங்கிப் பரபரக்கக் கதவு தட்டப்பட்டதும் ராஜுவுடன் தியாகுவும் கீழே இறங்கினான். சுசீலா கதவைத் திறந்தாள்.

''ராஜு! யசோதைக்கு ஆக்ஸிடெண்ட். ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். உடனே புறப்படு'' என்று உமாபதி துரிதப்படுத்தினார்.

''ஐயோ, யசோதை!'' தியாகுதான் முதலில் அலறினான். அவர்களுடன் சுசீலாவும் இரு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு கிளம்பிவிட்டாள்.

யசோதை தலையில் பெரிய கட்டுடன் தன் நினைவின்றிக் கிடந்தாள். சோகமே உருவாக ராஜுவும் தியாகுவும் அவள் அருகில் அமர்ந்திருந்

தனர். கமலாவின் உள்ளமோ தவித்துக் கொண்டிருந்தது. உமாபதி ஓர் ஓரமாக நின்றிருந்தார்.

''உமாபதி! கோவிலுக்குப் போவதாகச் சொன்னவள் லஸ்ஸுக்கு எப்படி வந்தாளோ!'' என்று ராஜு கேட்டார்.

''ராஜு! நிதானமாக நான் அதைப் பற்றிக் கூறுகிறேன்'' என்று உமாபதி பதிலளித்து விட்டார்.

உலகப் பாதையில் தன் வாழ்வுப் பயணத்தை முடித்துக் கொண்டுவிடாமல் யசோதை தங்களுடன் மேலும் வாழ்வை நடத்தவேண்டும் என இரவு முழுதும் விநாடிக்கு விநாடி அம்மூவரும் துடிதுடித்து எதிர் நோக்கிக் கொண்டிருந்தபொழுது இரவுப் பயணம் முடிந்து சென்னை எப்பொழுது அடைவோம் எனத் துடிதுடித்துக் கொண்டே விமானத்தில் சீதா வந்து கொண்டிருந்தாள்.

ஆபீசிலிருந்து சீதா இப்படி ஒரு செய்தி கொண்டு வருவாள் என மூர்த்தி எதிர்பார்க்கவேயில்லை. வந்தவள் தடதடவென உள்ளே நுழைந்து கட்டிலில் அப்படியே அமர்ந்து விட்டாள். மூர்த்தி பயந்து விட்டான். அவள் அருகில் சென்றமர்ந்து, ''சீதா! என்ன இது? ஏன் இப்படி விழுந்து விட்டாய்?'' என்று வினவினான்.

சீதாவால் பேசவே முடியவில்லை. அவளுக்குத் தூக்கித் தூக்கிப் போட்டது.

''என்ன விஷயம் சீதா? ஆபீசில் ஏதாவது நேர்ந்து விட்டதா? எப்படியாயினும் சரி, இனி நீ ஒருவர் கீழ் நிற்க வேண்டிய அவசியமில்லை. ஏதோ பணம் வைத்திருப்பதாகச் சொன்னாயே, அது சொற்பத் தொகையேயானாலும் அதை வைத்துக் கொண்டு வியாபாரத்தைத் தொடங்கி விடுகிறேன். முழு மூச்சுடன் இறங்கினால் நம் இருவருக்கும் அதுவே போதும்.''

சீதா அப்போதும் வாய் திறந்து பேசவில்லை. சம்பளம் வாங்கச் சென்றவளுக்கு அந்த நேரத்தில் சென்னையிலிருந்து 'டிரங்க்' போனில் அழைப்பு வருமென எதிர்பார்க்கவில்லை. அவள் நடுக்கத்துடன் போனைக் கையில் எடுத்தாள் என்று சொல்லிவிட முடி



## நேருவா மறைந்தார்?

'காணல்'

நேருவா மறைந்தார்? இல்லை.
நிலத்திலே வாழும் நின்ற
வீரமும் அறமும் சால்பும்
விடுதலை விறலும் வீழ்ந்த;
வாரமாம் பகைவர் வஞ்சர்
தம்மையும் மனிதர் என்ற
நீரமும் கனிவும் குன்றும்
செம்மையும் சிதைந்த இன்று.

நேருவா மறைந்தார்? இல்லை.
நீண்டநாள் அடிமைத் தாழ்வுச்
சோர்விலே சிதறிப் பின்னர்
சுதந்திரம் அவரால் பெற்றுப்
பாரிலே பதைக்கும் மக்கள்
பரிபவம் துடைக்க முந்தும்
பாரதம் தியாகப் பண்புப்
படையினை இழந்த தின்று.

நேருவா மறைந்தார்? இல்லை.
நெருங்கிய சாவை எள்ளிச்
சூரனும் பணியே சூழ்ந்த
சுடர்த் தவம் மறைந்த திங்கே.
யாருளர் நேரு போனால்?
யாரிலர் நேரு நின்றால்?
பாரெலாம் அணைத்த நேர்மைப்
பரிவொளி அணைந்த தின்று.

நேருவா மறைந்தார்? இல்லை.
நீருள தனையும் நீண்ட
பாருள தனையும் தெய்வப்
பரிதியுள் ளளவும் நன்றி
ஈரமுள் ளளவும் வாழ்வை
இலட்சியம் அழைக்கும் காறும்
நேருவும் மறைவரோ? எம்
நெஞ்சினிற் பிறந்தார் இன்று.

யாது. பணம் அனுப்பும் விஷயம் பற்றித் தியாகுதான் ஏதாவது கூறுவான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் — பேசியது உமாபதி.

சென்னையில் இருந்தவரை ராஜு, யசோதை, உமாபதி எல்லோரையும் பற்றித் தியாகு கூறியிருக்கிறான். ஆனால் அவர்களில் ஒருவரையாவது நேரில் சந்திக்கத் தியாகு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்ததேயில்லை.

உமாபதி தம்மைத் தாமே அறிமுகம் செய்துகொண்டு பேசினார்.

''நான்தான் உமாபதி. தியாகுவின் வீட்டுக்கு நெருங்கிய நண்பன்..''

''மிகவும் சந்தோஷம். நான் சீதா பேசுகிறேன். என்னைத்தான் நீங்கள் கூப்பிட்டீர்கள் என்று கூறினார்கள்.''

''ஆமாம். நான் கூப்பிட்ட நேரத்தில் நீங்கள் அங்கிருந்தது என் அதிர்ஷ்டம்தான். நீங்கள் தயவு செய்து என்னுடைய ஒரே ஒரு கேள்விக்குப் பதில் கூறினாலும் போதும்.''

''என்ன கேட்கப் போகிறீர்கள்?''

''தியாகுவிடம் நீங்கள் மொத்தமாகப் பணம் கேட்டதுண்டா? அவன் அனுப்புவதாகக் கூறினானா? அந்தப் பணம் ஏது?''

சீதா தயங்கினாள். எதற்காகத் திடீரென்று அவ்விதம் கேள்வி பிறக்கிறது?

''தயவுசெய்து இந்தக் கேள்விக்கான காரணம் கூறினால் நலம்.''

''இதில் ஒளிவு மறைவு செய்ய நான் விரும்பவில்லை. நீங்கள் சென்ற மறுதினமே தியாகுவின் ஆபீசில் திடீரென ஆடிட் இன்ஸ்பெக்ஷன் நடந்தது. ஏதோ பணக் குறைவு ஏற்பட்டது தெரிய வந்தது. அந்த டிபார்ட்மெண்டுக்குத் தியாகுதான் பொறுப்பாளி. அதனால் அவன் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டு நிற்கிறான். இதே சமயம் உங்களுக்கு ஒரு டிராப்ட் அவன் வாங்கியிருப்பது வீட்டிலுள்ளோருக்குத் தெரிந்து விட்டது.''

சீதாவுக்கு இச் செய்தி இடி விழுந்தது போல் இருந்தது. ''என் தியாகுவின்மீது திருட்டுக் குற்றமா?'' போனிலேயே அவள் அலறி விட்டாள்.

''ஆமாம். உங்களுக்கு டிராப்ட் அனுப்ப வேண்டிய காரணத்தை எவ்வளவு முறை கேட்டும் அவன் பதில் கூறவே மறுக்கிறான். கஷ்டம் சூழ்ந்துள்ள நிலை. அப்படி இருந்தும் அவன் இதுபோல் இருப்பது சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்கிறது. தயவு செய்து உங்களுக்குத் தெரிந்தாலாவது நீங்கள் விளக்கிக் கூறினால் நலம். இன்னும் இரண்டு நாட்கள்தான் ஆபீசில் தவணை கொடுத்திருக்கிறார்கள். நீங்கள் விளக்கம் கூறினாலாவது அப் பணம் வேறு எவ்விதம் போயிருக்கும் என்பதை முயற்சி செய்து அறிந்து அவனை விடுவிக்கப் பாடுபடுவோம். இல்லாவிடில் இதற்கு என்ன தண்டனை கிடைக்கும் என்று உங்களுக்கே தெரியும்....''

சீதா மூர்ச்சித்த நிலைக்கு வந்து விட்டாள். தியாகுவின் மேம்பட்ட குணம் அவளைத் திக்குமுக்காடச் செய்தது. இத்தனை கஷ்டம் சூழ்ந்துவிட்ட நிலையிலும் சீதாவைப் பற்றியோ, மூர்த்தியைப் பற்றியோ அவன் வெளியிட விரும்பவில்லை. தன் குடும்பம் காரணமாகத் தியாகுவுக்கு இத் துன்பம் நேர்ந்துவிடும் என்று தெரிந்திருந்தால் அவள் முன்கூட்டியே அவன் மனைவியைச் சந்தித்து எல்லாவற்றையும் கூறியிருந்திருப்பாள். தன்னால் வந்த வினையை இனி அவள் எப்படிப் போக்க முடியும்?

வேறு யோசனையின்றி அவள் உமாபதியிடம் போன் மூலமே சொல்லி விட்டாள். ''இதெல்லாம் நான் நேரில் வந்து சொல்ல வேண்டியவை. இடம் கிடைத்தால் விமானத்திலேயே உடனே வந்து விடுகிறேன்.''

வீட்டுக்கு எவ்விதம் ஓர் ஆபத்தும் இல்லாமல் திரும்பினாளோ, அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. வந்தவள் கட்டிலில் சுருண்டுவிட்டாள்.

''சீதா, என்னதான் விஷயம்? சீக்கிரம் சொல்லேன்.'' மூர்த்தி கேட்டான்.

''தி...யாகு...தியாகுவுக்கு ஆபத்து.'' சீதா தட்டுத் தடுமாறிக் கூறினாள்.

''என்னது? தியாகுவுக்கு ஆபத்தா? ஏதாவது காரில் மோதி...'' மூர்த்தி திடுக்கிட்டபடி கேட்டான்.

சீதா எழுந்து உட்கார்ந்தாள். ''இல்லை. இதைவிடக் கொடூரம்...'' என்று கூறியவள் போனில் கேட்ட விஷயங்களைக் கூறினாள்.

எல்லாவற்றையும் கேட்ட மூர்த்தி துள்ளி எழுந்தான். ''தியாகுவிடம் நீ அதிகப்படியான சலுகை எதிர்பார்க்கிறாய். உனக்கு அவன் எவ்வளவோ உதவிகள் செய்து விட்டான். கடைசியில் நமக்கு வாழ்க்கையில் ஒரு பாதை அமைக்க வேண்டுமென அவனைத் திருட்டுக் குற்றத்தில் மாட்டி விட்டாய்...'' என்று மூர்த்தி கர்ஜித்தான்.

''இல்லை...இல்லை...எனக்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாது....''

''நீ அவனைப் பணம் கேட்டிருக்கிறாய். அவன் கையில் பணமில்லை. அவன்

ஆபீஸ் பணத்தில் கைவைத்திருக்கிறான்.'' மூர்த்தி கூறினான்.

''இல்லை... இல்லை... ஐயோ, அப்படியெல்லாம் கூறாதீர்கள். அது உங்களுடைய பணம். தியாகுவிடமிருந்தது.''

''என் பணமா? அப்படிச் சொல்லிவிட்டால் நான் ஒப்புக் கொண்டுவிடுவேன் என்று பார்க்கிறாயா?''

''இல்லை. என் வார்த்தையை நம்புங்கள். அத்தை இருந்தபோது தியாகு நம் வீட்டோடு இருந்தது உங்களுக்கு நினைவிருக்கலாமே. அப்போது அத்தை, தியாகுவுக்கு ஆபீஸில் டிபாஸிட் பணம் கட்ட, உங்களுக்குத் தெரியாமல் வைத்திருந்த பணத்தைக் கொடுத்தாள். தியாகு வேலையில் அமர்ந்ததும் அப்பணத்தைச் சிறுகச் சிறுகச் சேர்த்துத் திருப்பிக் கொடுத்தார். ஆயினும் நான் அந்தப் பணத்தை அவரிடமே விட்டு வைத்தபோது அத்தையும் சம்மதித்தாள். கள்ளக் கடத்தல் கேஸில் உங்களைச் சிக்கவைத்துக் கைது செய்தபோது, தியாகு அப்பணத்தில்தான் ஜாமீனில் உங்களை விடுவித்தார். அப்பணம் தியாகுவிடமே இருந்தது. நீங்கள் சிறையிலிருந்து விடுதலையாகியதும் உங்களை ஒரு தொழிலில் ஈடுபடுத்த அவர் அப்பணத்தை டிராப்ட் மூலம் உடனே அனுப்புவதாகக் கூறினார். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.''

சீதாவின் நம்பிக்கை நிறைந்த வார்த்தைகளைக் கேட்டதும் மூர்த்தி, ''சீதா! ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்? தியாகுவை இக்கட்டிலிருந்து காப்பாற்ற உடனே சென்னைக்குப் போ'' என்றான்.

விமானத்திலேயே கிளம்பி விட்டாள், சீதா. அவள் மனத்திலும் குழப்பம் இருக்கத்தான் செய்தது. ஒருகால் கையிலிருந்த பணத்தைச் செலவழித்துவிட்டு, உடனே பணம் கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் தியாகு ஆபீஸிலிருந்த பணத்தைக் கையாடி விட்டாரோ!

விமான நிலையத்திலிருந்து சீதா, நேராக வீட்டுக்குத்தான் வருவாள் என உமாபதி எதிர்நோக்கினார். சுசிலாவையும் இரு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு அவர் ராஜுவின் வீட்டுக்கு வந்து விட்டார். ராஜு ஆஸ்பத்திரியிலேயே இருந்தார். தியாகுவும் மருந்து வாங்குவதிலும் ரத்த தானம் செய்வதிலும் ஓடியாடியபடி ஆஸ்பத்திரியிலேயே இருந்தான்.

உமாபதி எதிர்நோக்கியது வீண் போகவில்லை. சீதா நேராக அவர்கள் வீட்டுக்குத்தான் வந்தாள். சுசிலா அவளை ஏறிட்டுப் பார்க்கவில்லை. முதலில் தானே சீதா தன் கதையை உமாபதியிடம் விளக்கினாள்.

தந்தை இறந்து, தாயும் அவளும் அத்தையிடம் வந்து சேர்ந்தது, அதன் பிறகு வேலை தேடிக் கொண்டது, தியாகுவைச் சந்தித்துத் தன் வீட்டிலேயே வைத்துக் கொண்டு பிறகு அத்தை டிபாஸிட் கொடுக்க அவனை வேலையில் அமர்த்தியது, சீதா மூர்த்தியை மணக்கப் போகிறாள் என்ற உண்மையை அறிந்து அத்தை உணர்ச்சிவசப்பட்டு இறந்ததும், தாயின் மரணம் மூர்த்தியின் மனத்தை மாற்றி அவன் நல்வழியில் திரும்பியபோது கள்ளக் கடத்தல் கேஸில் சிக்கிக் கைது ஆனதும் அவனை விடுவிக்கத் தியாகு சென்னையிலிருந்து வந்து இரவு பகலாக அவனுடன் சேர்ந்து முயற்சி எடுத்ததும், விடுதலை பெறாவிடினும் குறைந்த காலத் தண்டனை கிடைத்ததும், சென்னைக்கு மாற்றலாகி வந்த பிறகு விடுதலை தினத்தில் மூர்த்தியைச் சந்திக்கக் கல்கத்தாவுக்குப் போனதும், தியாகுவிடம் கொடுத்து வைத்திருந்த பணத்துக்குத் தான் டிராப்ட் வாங்கியிருப்பதாகவும் அவள் கதை போல் கூறிவிட்டாள். அருகிலிருந்த சுசிலா, அவள் கதையைக் கேட்கக் கேட்க விம்மித் தவித்தாள். தான் கல்கத்தாவிலிருந்து கோபித்துக் கொண்டு வந்த தினமும் அவளுக்கு நினைவு வந்தது. வக்கீலுக்குக் கொடுக்க நூறு ரூபாய் பணம் குறைந்தது காரணமாக, தன் உதவியாக இருக்கட்டுமென்று டெபாஸிட் பணத்தைத் தொடாமலே பாங்கியிலிருந்து தன் கணக்கில் நூறு ரூபாய் வாங்கிக் கொடுத்திருக்கிறான் தியாகு. டிராப்டின் உண்மையும் தெரிந்தபோது சுசிலா தன் ஆத்திரத்தின் விளைவை நினைத்து வருந்தினாள்.

சுசிலா குனிந்த தலை நிமிராமல் இருந்தாள். மூர்த்தி தீயவன் எனத் தெரிந்தும் அவனை நம்பி வாழ்க்கைப் பாதை அமைத்துக் கொள்கிறாள் சீதா; சமமற்ற வயதுடையவரை மணந்து முதலில் அநுபவித்த துன்பங்களை மறந்து கணவனை ஆதரிப்பது மூலம் வாழ்க்கையின் வெற்றிப் பாதையை ஏற்படுத்திக் கொண்டவள் யசோதை. ஆனால் சுசிலா...

சுசீலாவின் உடம்பு சிலிர்த்தது. தியாகு எவ்வளவு நம்பிக்கையுடன் அவளிடம் நடந்து கொண்டான். அவளோ அவனுக்குத் திருட்டுப் பட்டம் கட்ட முன் வந்துவிட்டாள். ஐயோ! தியாகு கைதாகி விடுவாரோ!...சுசிலா சத்தமிட்டுக் கண்ணீர்விட ஆரம்பித்து விட்

ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்








சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப் படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை யூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.



வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர்-லாம்பர்ட் :.பார்மஸூடிகல் கம்பெனி

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

டாள். கீதாவும் உமாபதியும் சுசீலாவைச் சமாதானம் செய்ய முயன்றனர்.

கீதா அங்கேயே குளித்துச் சாப்பிட்டாள். பிறகு திருட்டுப் போன பணத்தைப் பற்றி விசாரிக்க ஆபீசுக்குச் சென்றாள்.

ஆபீசில் கீதாவைப் பார்த்ததும் சென்னைக் கிளை மானேஜர் முகர்ஜி ஆச்சரியம் அடைந்தார். ''என்ன மிஸ் கீதா! கல்கத்தாவுக்குப் போக லீவு எடுத்தீர்களே! அதற்குள் திரும்பி விட்டீர்களே! உங்கள் சம்பளம் கூடக் கல்கத்தா கிளையிலிருந்து கிடைக்கும்படி ஏற்பாடு செய்தேனே!''

''சென்னை ஆபீஸ் நிலை எனக்குப் பெரும் செலவு வைத்து இங்கு வரும்படி செய்துவிட்டது. தியாகுவுக்கு...''

''நாங்கள் என்ன செய்யட்டும்? பொதுவாக ஒருவருக்குமே தியாகுவின் மீது சந்தேகம் இல்லை. எனக்கும் அவன் எடுத்திருக்க மாட்டான் என்பது எண்ணம். ஆனால் அப் பணத்துக்கான பொறுப்பு அவனிடமல்லவா இருக்கு?''

''நீங்கள் தனிப்பட்ட முறையில் இதில் ஒன்றும் செய்ய முடியாதா?''

''இதில் நான் என்னம்மா செய்ய முடியும்? பண விஷயமாயிற்றே!''

கீதா தலை குனிந்தபடி மௌனமாகச் சற்று அமர்ந்திருந்தாள். அவள் எழுந்திருந்தபோது, தள்ளாடித் தள்ளாடி ஆபீஸ் குமாஸ்தா குமார் அவர்கள் அருகில் வருவதைக் கண்டாள்.

மானேஜரை நோக்கி வந்தவன் அருகிலிருந்த நாற்காலியில் தொப்பென உட்கார்ந்து விசித்து விசித்து அழுதான். முகர்ஜியும் கீதாவும் திடுக்கிட்டனர். முகர்ஜி, ''குமார்! என்ன விஷயம்? ஏன் அழுகிறாய்? உன் மனைவிக்கு உடம்பு நலமில்லை என்றாயே, இப்போது தேவலையா?'' எனக் கேட்டார்.

''ஐயோ, என் தீச்செயல் காரணமாக நான் அவளைக் கொன்றுவிட்டேனே! நான் ஏன் இந்தப் பாப காரியத்தைச் செய்தேன்?''

''என்னப்பா சொல்கிறாய் நீ? உன் மனைவி இறந்து விட்டது குறித்து வருந்துகிறேன். ஆனால் ஏதோ பாப காரியம் என்கிறாயே!''—முகர்ஜி கேட்டார்.

அவன் ஒரு கட்டு நோட்டுக்களை மேஜை மீது போட்டான். ''இதோ பாருங்கள். இந்தப் பணத்தை நான் திருடினேன், ஸார்! திருடினேன் ஆபீஸ் பணத்தை. மனைவிக்கு இந்தப் பணத்தில் மருந்து வாங்கி நல்ல வைத்தியம் செய்யத் திருடினேன். ஆனால் நான் இங்கே திருடிய நேரத்தில்

நான் பெற்றுள்ள பாரம்பரியச் செல்வம் என்ன? நான் எதற்கு வாரிசு? ஆயிரம் பதினாயிரம் ஆண்டுகளாக மனித குலம் சாதித்ததற்கெல்லாம் நான் வாரிசு. அது எண்ணியதற்கெல்லாம்; உணர்ந்ததற்கெல்லாம், பட்ட துன்பங்களுக்கெல்லாம், அநுபவித்த இன்பங்களுக்கெல்லாம், அதன் ஜயகோஷங்களுக்கெல்லாம், அதே போல் தோல்விப் புலம்பல்களுக்கெல்லாம் — எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் தொடங்கி, இன்றுவரை நீடித்து, எதிர்காலத்துக்கும் அறைகூவல் விடும் மனிதனின் பிரமிப்பூட்டும் சாகஸத் திறனுக்கெல்லாம் நான் வாரிசு. இவற்றுக்கும், இவற்றுக்கும் மேலாகப் பலவற்றுக்கும் சகல மக்களையும் போல நானும் வாரிசு.



இதனினும் விசேஷமாக இந்தியாவுக்கென ஒரு பாரம்பரியச் செல்வம் உண்டு. அது தனிப்பட்டது என்று சொல்வதும் சரியல்ல. ஏனெனில் எந்தப் பரம்பரைப் பண்பும் மனித இனம் முழுவதற்கும்பொதுவானதுதான். ஆனாலும் சில பண்புகள் நம்மிடம் மட்டும் விசேஷமாகப் பொருந்தியுள்ளன, நம்முடைய சதையிலும், ரத்தத்திலும், எலும்பிலும் ஊறியுள்ளன. நாம் எதுவாக இருந்தோமோ, இருக்கிறோமோ, எப்படி ஆகப் போகிறோமோ, அப்படி நம்மை ஆக்குகின்றன. அவற்றுக்கு நான் வாரிசு.

— ''பாரத தரிசனம்.''

என் மனைவி அங்கே உயிரை விட்டு விட்டாள். அவள் உயிரோடிருந்த வரை ஒருவர் பொருளுக்கும் ஆசைப் படமாட்டாள். அதனால்தான் போலும் இந்தத் திருட்டுப் பணத்தில் மருந்து சாப்பிட விரும்பாமல் போய்விட்டாள். நானோ திருட்டுக் குற்றத்தையும் புரிந்து விட்டு, இரு குழந்தைகளையும் வைத்துக் கொண்டு தவிக்கிறேன்.... இந்தப் பணம் என் கையிலிருக்கும் வரை என் மனச்சாட்சி உறுத்திவிடும் ஸார். அதனால் உங்களிடம் திருப்பி விட்டுத் தண்டனை பெறவே வந்தேன்...''

கீதாவும் முகர்ஜியும் ஒருவரை யொருவர் மகிழ்ச்சியுடன் நோக்கினர். தியாகு விடுதலை பெற்று விடுவான்.

முகர்ஜி மேலதிகாரிகளுக்குக் கூற போனைக் கையிலெடுத்தார். கீதா அவரைத் தடுத்தாள். ''ஸார்! நீங்களே ஏதே

னும் வழி செய்து குமாருக்குத் தண்டனை கிடைக்காமலிருக்கப் பாருங்கள்.''

''வேண்டாம்... வேண்டாம்... நான் தண்டனையை ஏற்க விரும்புகிறேன். அதுதான் என் தவறுக்கான பிராயச் சித்தம்.'' குமார் கேவினன்.

''மிஸ்டர் குமார்! பணமே மா கிடைத்துவிட்டது. இரு குழந்தைகளைத் தவிக்க விட்டு விட்டு நீங்கள் தண்டனை அடைவதில் என்ன லாபம்? இனியா வது அந்தக் குழந்தைகளுக்குத் தாய் ஸ்தானத்தில் இருந்து பாதுகாத்து வாருங்கள்'' என்று கூறிய கீதா, இந்த ஆனந்த சமாசாரத்தைக் கூறத் தியாகு வைத் தேடி விரைந்தாள்.

யசோதையின் நிலையில் மாறுதல் இல்லை. உமாபதி ராஜுவைத் தனிமை யில் அழைத்துக் கீதா கூறியவற்றைக் கூறினர். தியாகுவுக்கோ கீதா வந் திருப்பதே தெரியாது.

ஆஸ்பத்திரியில் கீதா நுழைவதைப் பார்த்துத் தியாகு திகைத்து, ''கீதா! நீ இங்கே எப்படி வந்தாய்?'' என்றான்.

அவன் கேள்வி அவள் காதில் விழு முன் சுசிலா கீதாவை நோக்கி ''கீதா! ஆபீஸ் பணம் என்ன ஆயிற்று? ஏதே னும் தெரிந்ததா?'' என்று கேட்டாள்.

கீதாவோ தியாகுவை நோக்கினள். ''மிஸ்டர்! காஷியர் பதவியில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென் பதை இனியாவது புரிந்துகொள்ளுங்கள். சுசிலாவின் அதிர்ஷ்டம், கடவுள் உங்க ளைக் காப்பாற்றி விட்டார்!''

அவள் வார்த்தை அனைவருக்கும் அமிருத தாரையாக விழுந்தது. ''என்ன ஆயிற்று? பணம் கிடைத்ததா?''

கீதா ஆபீஸில் நடந்த விஷயங்களைக் கூறினள். அவள் கூறி முடித்ததும் அனைவரது நெஞ்சும் குளிர்ந்தது.

''மிஸ்டர் தியாகு! நீங்கள் கெட்டிக் காரர்தான். ஆனல் தாம்பத்திய விஷயத் தில் நீங்கள் தோல்வி அடைந்து விட்டீர் களோ என்றுதான் நான் பயப்படு கிறேன். மனைவி என்பவள் உடலோடும் உள்ளத்தோடும் ஐக்கியமானவள். என் குடும்ப ரகசியத்தை நீங்கள் வெளியே கூறமாட்டேன் என வாக்குக் கொடுத்து அதைக் காப்பாற்றியது பெருங் குணம். ஆனல் ஐக்கியமாகி விட்ட மனைவி யிடம் இரகசியம் என நீங்கள் வைத் தது தவறு எனவே நான் கருதுகிறேன்.''

''இல்லை கீதா.. நான்தான்.......'' சுசிலா ஏதோ கூற வந்தாள். அதற்குள் அறையில் டக், டக் என்று பூட்ஸ் ஒலிக்க யசோதையைப் பரிசோதித்து விட்டு டாக்டர் வெளியே வந்தார். ''ஒரு புது மருந்து இன்றுதான் ஜெர்மனியி லிருந்து வந்தது. அதைக் கொடுத் திருக்கிறேன். இன்னும் ஆறு மணி நேரத்தில் அதாவது இரவு பதிஞெரு மணிக்கு இதன் குணம் தெரியும். பேஷண்ட் சற்றே கண் திறந்தாலும் நம்பிக்கை உண்டு. இல்லாவிட்டால்...'' ஆண்டவனை நோக்கிக் கரம் குவித்து விட்டு டாக்டர் சென்றுவிட்டார்.

யசோதையைச் சுற்றி அனைவரும் துடிக்கும் நெஞ்சுடன் அமர்ந்திருந் தனர். குழந்தைகள் தூங்கி விட்டனர்.

ஆறு மணி நேரமும் ஆறு யுகம்தான். பதிமூன்றடிக்கப் பத்து நிமிஷம். தியாகுவுக்கு நீர் முட்டியது. அவன் நீரின் தன்மையைப் படித்திருக்கிறான். நிறமற்று, ருசியற்ற குணம் கொண்ட நீர் மற்றவர்களுக்கெனச் சுத்தத்தைத் தரவும், அழுக்கை நீக்கவும் உதவுவது போல் யசோதை தனக்கென வாழா மல், பிறருக்கு வாழ்ந்த நீரோட்டமாக இருந்தாளே, அவள் அவனையும் மற்ற வர்களையும் ஏமாற்றி...

பதிஞென்றடிக்க ஐந்து நிமிடம். சுசிலா தவித்தாள். அவள் நீரின் தன்மையைக் கண்டிருக்கிறாள். போகு மிடமெல்லாம் மனிதனின் தாகத்தைப் போக்கி, தான் அடையும் பாத்திரத் தின் உருவையும் அடைவதுபோல் யசோதை சென்ற இடத்தின் மனிதர் களின் மனத்துக்கு ஒப்ப நடந்து துயரம் என்னும் தாகத்தை நீக்கும் நீரோட்ட மாக இருந்தாளே அவள் அவளையும் மற்றவர்களையும் விட்டு விட்டு....

பதிஞென்றடிக்க இரண்டு நிமிடம். ராஜு துடித்தார். நீரின் தன்மையை அவர் அனுபவித்திருக்கிறார். மேடு பள்ள இடங்களில் சமமாகப் பரவிச் சமா தானத்தைக் காட்டும் குணம் போல் எல்லோரிடமும் பேதமில்லாமல் பழகும் நீரோட்டமாக யசோதை இருந்தாளே அவள் அவரையும், மற்றவர்களையும் மறந்து விட்டு....

அதோ, யசோதையின் உடம்பில் ஓர் அசைவு. இமைகள் மெள்ளத் திறக்கின்றன...

''நீங்கள் அதிர்ஷ்டசாலிகள்... நோயாளி பிழைக்க வழியும், நம்பிக் கையும் உண்டு.'' பின்னல் நின்ற டாக் டர் கூறியதும் அனைவரும் சுவர்க்கம் கண்ட குதூகலம் கொண்டனர்.

இனி அவர்கள் இல்லத்தில் துயர மென்னும் தாகத்துக்கு இடமில்லை. தாகத்தை நீக்கும் நீரோட்டமாக யசோதை பிழைத்து விட்டாள். சுகம் கண்டுவிட்ட ஆனந்தம் அவர்களுக்கு.

— முற்றும் —



கல்கத்தா, இந்தியன் சேம்பர் ஆப் காமெர்ஸ், ஸினியர் அஸிஸ்டெண்ட் ஸ்ரீ கே. எஸ். வெங்கடபதி அவர்கள் குமாரி சௌ. K. V. சீதா B. A. (Hons.)க்கும், திருவனந்தபுரம், சர்வே இலாகா காரியாலய அஸிஸ்டெண்ட் சூபரின்டெண்ட் ஸ்ரீ ஆர். வைத்தியநாத அய்யர் குமாரர் செஞ்சீவி V. கணேசன் B. Sc., B. Sc. (Eng.) சப்-டிவிஷனல் ஆபீஸர் M. E. S. மதுரை, அவர்களுக்கும் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக சென்னையில் நடைபெற்றது.

வாழ்க, மணமக்கள்!





# சிரிக்கவும் -------
# -------சிந்திக்கவும்

''கண்ணீர் என்பது கண் சுரப்பிகளி லிருந்து வரும் ஒரு வித நீர். அதில் உப்புச் சத்தும், மற்றும் சில ரசாயனப் பொருள் களின் சத்தும் கலந்திருக்கின்றன....'' என்று பல்ஸாக்கின் கதைகளிலொன்றில் வரும் நிரீசுவரவாதி கூறுகிறான்.

''இல்லை. அது வெறும் ரசாயனத் திரவம் மட்டும் அல்ல! அது ஆத்மா அழுவதாகும்!'' என்று வேதாந்தி பதில் அளிக்கிறான்.

நேருஜியின் மறைவுக்காக, இந்தியாவில் நாற்பது கோடி மக்கள் கண்ணீர் விடவில்லை. நாற்பது கோடி ஆத்மாக்கள் அழுதன; அழுது கொண்டே இருக்கின்றன.

சில பத்திரிகை நிருபர்களும், ஆசிரியர் களும் அவரைப் பற்றி எழுதுவது வசன கவிதையாக அமைந்து விட்டிருக்கிறது. காரணம் அவரது வாழ்க்கை சம்பந்தப்பட்ட அத்தனை விஷயங்களும் மிக மிக உயர்ந்தன வாக இருப்பதாகும். அகராதிகளில் உள்ள 'பண்பு', 'நேர்மை', 'பெருந்தன்மை', 'தயா ளத்துவம்', 'அறிவு' 'படிப்பு', 'தொண்டு', 'தியாகம்' என்பது போன்ற வார்த்தைகள் இன்று கர்வத்துடன் இருக்கின்றன, அந்த உத்தமன் விஷயத்தில் தாம் பெரிதும் உப யோகப்படுத்தப்பட்டோம் என்பதால்.

ஒரு தேசத் தலைவராக, உலகத்தின் மிகப் பெரிய ஜனநாயகத்தின் பிரதம மந்திரியாக இருந்த அவர் உங்களையும் என்னையும்போல் ஒரு சர்வ சாதாரண மனிதராயுமிருந்தார்! அது அழகுக்கு அழகு செய்வது போலிருந் தது. மக்களுக்கு அவரை அதிகம் பிடிக்கச் செய்தது.

க க க

**1939**ம் ஆண்டு. திரிபுராவில் காங்கிரஸ் மகாநாடு மிகவும் குழப்பமான சூழ்நிலையில் நடைபெற்றது. அதற்குச் சுபாஷ் சந்திர போஸ், பட்டாபி சீதாராமையா இரண்டு பெரும் தலைவர்கள்! காந்திஜி ராஜ்கோட்டில் உண்ணாவிரதமிருந்து கொண்டிருந்தார்.

அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டி யின் கூட்ட மேடைக்கு, சுபாஷ் சந்திர போஸை ஒரு டோலியில் தூக்கி வந்து படுக்க வைத்தார்கள். அவர் அவ்வளவு உடல் நல மில்லாதபடி யிருந்தார். சுற்றிலும் தாயார், சகோதரிகள் முதலியவர்கள் உட்கார்ந்து கை விசிறிகளால் விசிறிக் கொண்டிருந்தார்கள்.

ஓர் அங்கத்தினர் ஒலிபரப்பியின் முன் நின்று சுபாஷ் போஸின் போக்கைக் கண் டித்துப் பேசிக் கொண்டிருந்த போது பத் திரிகைப் பிரதிநிதிகள் பகுதியிலிருந்த ஒரு வங்க நிருபர் கூச்சலிட்டும், கேள்விகள் கேட்டும் பேசுபவருக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டே யிருந்தார். மேடை மீதிருந்த நேருஜி எத்தனையோ சொல்லிப் பார்த்தும் அந்த நிருபர் ஒழுங்காக நடந்து கொள்ளவில்லை.

அவ்வளவுதான்; நேருஜி மேடையிலிருந்து குதித்து ஓடி அந்த நிருபரிடம் வந்தார். அவர் கையிலிருந்த நோட்டுக்களையும் பென் சிலையும் பிடுங்கினார். சற்றுத் தூரத்தில் நான் அமர்ந்திருந்தேன். என் பக்கத்தில் நாரதர் சீனிவாச ராவ் கையில் காமிரா வுடன் உட்கார்ந்திருந்தார். அவரைக் கிளப்பி விட்டு நேரு, நிருபரின் நோட்டைப் பிடுங் கும் காட்சியைப் படமெடுக்கச் சொன்னேன். மறுகணம் நேருஜி காமிராவை அடித்து வீழ்த்துபவர் போல் கையை ஓங்கினார்.

இந்தச் சம்பவம் என்னை நேருவின் 'விசிறி' யாகச் செய்தது. நாளடைவில் அவருக்கு அடிமையாகி விட்டேன்.

மேடையிலிருந்து குதித்து வருவதென் பது நேருஜிக்கு சர்வ சாதாரணமாகிவிட்டது. அவரைப் பற்றி பி. பி. ஸி.யில் (28-5-64ந் தேதியன்று) பேசிய ஸர் பிரான்ஸிஸ் வாட் ஸன் ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டார்.

....'' அந்தப் பெரிய கூட்டத்தில் குழப்ப மேற்பட்டது. ஸ்திரீகள் உட்கார்ந்திருந்த பகுதியில் சில காலிகள் பிரவேசித்துவிட்டார் கள். மறு கணம் ஸ்ரீ நேரு மேடையிலிருந்து குதித்து அந்த இடத்தை நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்.'' வாட்ஸனும் கூடத்தான்.

பிரதம மந்திரியாக வந்த பிறகு கூட அவரது இந்தப் பழக்கம் நின்றுவிடவில்லை. லக்ஷ்மணபுரியில் ஒரு பெரிய பொதுக்கூட்டம் நடந்து கொண்டிருந்தது. ஹிந்து மகாசபாக் காரர்கள் கலாட்டா செய்யத் தொடங்கி னர். கூட்டத்தினர் கலவரமடைந்து எழுந்து முன்வரத் தொடங்கினர். அவ்வளவுதான்; மேடையின் மீதிருந்த நேருஜி எழுந்தார்.

ஆனால், கீழே குதிக்க முடியவில்லை. ஏனென்றால், இரண்டு பலமான கைகள்,





அவரை இரும்புப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனர். அப்படிச் செய்தது பாதுகாப்பு உத்தியோகஸ்தர். நேருஜி எவ்வளவு முண்டிப் பார்த்தும் பிடியைத் தளர்த்த முடியவில்லை. தப்பி ஓட முடியவில்லை. அவர் உத்தியோகஸ்தரைப் பார்த்துப் புன்னகை புரிந்து, ''சரி உங்கள் இஷ்டப்படியே நடக்கிறேன். என்னை விட்டுவிடுங்கள்'' என்றார்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவர் யாரையுமே தாக்கியதில்லை. பிடித்துக் கொள்வார். குலுக்குவார். அவ்வளவுதான்; எதையும் பேசமாட்டார்.

போலீஸ்காரர்கள் தம்மைப் பாதுகாக்க வருவதே அவருக்குப் பிடிப்பதில்லை. புதுச்சேரி விஜயத்தின்போது பலத்த போலீஸ் பாதுகாப்பு ஏற்படுத்தி இருந்தார்கள். ''நான் போலீஸ்காரர்களைப் பார்ப்பதற்காக இங்கே வரவில்லை. ஜனங்களைப் பார்க்கத்தான் வந்தேன்'' என்றார்.

அவரது தயாள குணத்தைக் காண்பிக்கும் சம்பவங்கள் எத்தனையோ உண்டு.

பாகிஸ்தான் பிரிவினையின்போது டில்லியிலிருந்த பல முஸ்லிம்கள் தம் மாளிகையில் தஞ்சம் புகுவதற்கு இடம் கொடுத்தார். வீட்டிலிருந்த சமையல் சாமான்களெல்லாம் ஆகிவிட்டன. கோதுமை முதலியன வாங்குவதற்காக நேருஜியே நெடு வரிசையில் நின்றார். குமாஸ்தா, பிரதம மந்திரியே வந்து நின்று கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு அவருக்குச் சாமான்களை முதலில் கொடுக்க முன்வந்தார். நேருஜி தாம் நிற்கும் வரிசைக் கிரமப்படிதான் தமக்குக் கொடுக்க வேண்டும் என்று கூறிவிட்டார்.

ஒரு சமயம் அவர் நள்ளிரவில் வீடு திரும்பிக்கொண்டிருந்தார். வண்டி ஒரு திருப்பத்தின் பக்கம் வந்தபோது இரண்டு ஆசாமிகள் ஒரு பள்ளத்தில் பதுங்கிக் கொள்வதைக் கண்டு வண்டியை நிறுத்தச் செய்தார். பாதுகாப்பாளர்கள் போய் அவ்விருவரையும் அழைத்துக் கொண்டு வந்தார்கள். உயிருக்குப் பயந்து ஒளிந்து கொண்டிருந்தவர் முஸ்லிம்கள். நேருஜி அவர்களைத் தம் வண்டியிலேற்றிக் கொண்டு போனார். வீட்டில் குளிர் பதனப் பெட்டியில் உள்ள உணவைக் கொண்டு வந்து கொடுத்து அவர்களைச் சாப்பிடச் செய்தார். மறு நாள் பத்திரமான இடத்துக்கு அனுப்பி வைத்தார். இந்தச் சம்பவத்தை ஸ்ரீ ஹெச். வி. ஆர். அய்யங்கார் அவர்கள் தமது கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

நேருஜியின் கோபம் பிரசித்தமானது. அதைப் பற்றி அவர் ஒரு தேர்தல் கூட்டத்தில் பிரஸ்தாபித்தார்:

''எனக்கு ஏன் பொசுக்கென்று கோபம் வந்து விடுகிறது தெரியுமா? நான் இந்திய மக்களிடமிருந்து பெரிய சாதனைகளை எதிர்பார்க்கிறேன். அவர்கள் திறமையில் எனக்கு அபார நம்பிக்கை உண்டு. காரியங்கள் துரிதமாக நடக்க வேண்டும். தேசம் சீக்கிரத்தில் அபிவிருத்தியடைய வேண்டுமென்று துடித்துக்கொண்டிருக்கிறேன். யாராவது மந்தமாக நடந்து கொண்டால் எனக்கு என்னையும் மீறிக் கோபம் வந்து விடுகிறது. ஆனால் அவர்கள் நண்பர்கள், தோழர்கள் என்று உணர்ச்சி என்னைப் பாத்தியத்துடன் கோபங் கொள்ளச் செய்கிறது.''

நேருஜி தினமும் பதினாறு முதல் பதினெட்டு மணி நேரம் உழைப்பவர். நான்கைந்து சுருக்கெழுத்தாளர்களை வைத்துக் கொண்டு இரவு பன்னிரண்டு மணிவரை வேலை செய்வார். பிறகு போதுமென்று விடுவார்; அவர்களை அதிகம் சிரமப்படுத்தக் கூடாதென்பதற்காக.

அவர் பதவி ஏற்ற புதிதில் காரியாலயத்தின் வாசலில் இறங்கிய மாத்திரத்தில் ஓடிப் போய் மாடிப் படிகளை இரண்டு இரண்டாகத் தாண்டி விரைந்து செல்வாராம். காரியதரிசிகளும், சப்ராசிகளும் அவர் மாதிரியே விரைந்து செல்வதைப் பார்க்க வேடிக்கையாக இருக்குமாம்.

குழந்தைகளோடு நேருஜி விளையாடுவது உலகப் பிரசித்தமானது. இது ஒரு பழைய சம்பவத்தை ஞாபகமூட்டுகிறது. பிரபல பிரிட்டிஷ் பிரதமரான பிட், தம் குழந்தைகளோடு தலையணைகளை விட்டெறிந்து விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது காரியதரிசி வந்து ''நெப்போலியன் இங்கிலாந்து மீது படையெடுத்துக் கிளம்பி விட்டான்'' என்று தெரிவித்தார். ''அவன் சிறிது நேரம் காத்துக் கொண்டிருக்கட்டும்'' என்று நிதானமாகக் கூறிவிட்டுக் குழந்தைகளோடு விளையாடி முடித்துவிட்டுச் சென்றாராம் பிரதமர் பிட். இந்தச் சம்பவத்தைத் திரைப்படத்தில் காண்பித்தார்கள்.

நேருஜி சிறுவர்களோடு சிறுவர்களாக விளையாடுவது பல அறிஞர்களுக்கு ஒரு புதிராயிருந்தது. ''குழந்தைகளோடு சேர்ந்திருக்கவும், அவர்களோடு பேசவும், ஏன், அவர்களுடன் விளையாடவும் கூட எனக்கு ஆசை. நான் வயோதிகன். நான் குழந்தையாயிருந்து எத்தனையோ காலமாகிறது என்பதை ஒரு கணம் மறந்திருப்பேன்'' என்று சங்கர்ஸ் வாரப் பத்திரிகையில் சிறுவர்களுக்கான ஒரு கட்டுரையில் தெரிவித்துக் கொண்டிருந்தார்.

வீட்டில், ஒரு நாள் அவர் பேரன் சஞ்சய் ''நானா! என் புது சைக்கிளை நீங்கள் பார்க்கவில்லையே!'' என்றான். உடனே அவர் அதைப் போய்ப் பார்த்தார். ''உங்களுக்கு அதை விடத் தெரியுமோ?'' என்று பேரன் கேட்டான். ''ஓ!'' என்று கூறி அந்தச் சிறிய சைக்கிளில் ஏறி அதை விட ஆரம்பித்து விட்டார். வீட்டிலுள்ளவர்கள் கூடிக் கைதட்டி வேடிக்கை பார்த்தார்கள்.

காந்திஜி காலமானதை யொட்டி நேருஜி நிகழ்த்திய ''விதியுடன் சந்திப்பு'' என்ற அந்தப் புகழ் பெற்ற பிரசங்கத்தில் ''எல்லா மனிதர்களும் திடீரென்று இறந்துபோக விரும்புவது போல் அவரும் திடீரென்று இறந்து போனார்'' என்று குறிப்பிட்டார். அத்தகைய வேதனையற்ற மரணம்தான் நேருஜிக்கும் கிட்டியது.

— என். ஆர்.

ஸ்வாமிஜியும் அவரது சீடர்களும் நைனிதாலிலிருந்து அல்மோராவைச் சென்றடைந்தனர். அதிர்ச்சி தரும் இரண்டு செதிகள் ஸ்வாமிஜிக்குக் கிடைத்தன. ஸ்வாமிஜியின் குருஸ்தானத்திலிருந்த பவஹாரிபாபாவும், ஸ்வாமிஜியின் அருமை சிஷ்யரான குட்வினும் காலகதிக்கு ஆளாகி விட்டிருந்தார்கள்.

'ராமகிருஷ்ணருக்கு அடுத்தபடியாக நான் நேசித்தது பவஹாரிபாபாவைத்தான்' என்று ஸ்வாமிஜி கூறினார்.



ஸ்வாமிஜியின் அமுத வாக்குகளை உலகத்துக்கு அழியாச் செல்வமாக எழுத்தில் தந்த குட்வின் சமீபத்தில் தான் சென்னையில் 'மெயில்' பத்திரிகையில் ஓர் உத்தியோகத்தில் அமர்ந்திருந்தார். உதகமண்டலம் சென்றிருந்த போது கபவாத ஜுரம் கண்டு காலபாசத்தில் சிக்கிக் கொண்டார்.

குட்வினுடைய மரணச் செய்தியை ஸ்வாமிஜி மிகவும் சாந்தமாகவே வாங்கிக் கொண்டார். அமைதியாக அமர்ந்து பக்தி, தியாகம் இவற்றைப் பற்றி நெடு நாழிகை பேசிக்கொண்டே போனார்.

ஆங்கிலத்திலும் நாட்டு மொழிகளிலும் ஆத்மிக சஞ்சிகைகளும், அவசியமானால் தினசரியுங்கூடத் தொடங்க வேண்டும் என்று நீண்ட காலமாகவே எண்ணி வந்தார் ஸ்வாமிஜி. அல்மோராவை விட்டுக் கிளம்புமுன், சென்னையில் ஸ்ரீ பி. ஆர். ராஜம் அய்யரவர்களை ஆசிரியராகக் கொண்டு நடந்த 'பிரபுத்த பாரதம்' (விழிப்புற்ற இந்தியா) என்ற பத்திரிகையை அல்மோராவுக்கு மாற்ற ஏற்பாடுகளைச் செய்து முடித்தார். வாலிபத்திலேயே வேதாந்த சாஸ்திரங்களை யெல்லாம் கற்று அநுபவத்தில் கலைத்தவரும், 'கமலாம்பாள் சரித்திரம்' என்ற ஆதித் தமிழ்ப் புதினத்தைத் தந்தவருமான வத்தலகுண்டுச் செல்வர் ஸ்ரீ ராஜம் அய்யர் அவர்கள் அல்பாயுளில் காலமாகி விட்டதால், அல்மோராவுக்குப் பத்திரிகை மாறியவுடன் ஸ்வரூபாநந்தர் அதன் ஆசிரியராக நியமிக்கப் பட்டார். சேவியர் மானேஜரானார். அச்சகத்துக்கான செலவுகளையும் சேவியர் ஏற்றார்.

அல்மோராவிலிருந்து ஸ்வாமிஜியும் அன்பர்களும் காச்மீரத்துக்குப் புறப்பட்டார்கள். ஸ்ரீநகரத்தைச் சென்றடைந்தார்கள்.

இச்சமயத்தில் ஸ்வாமிஜி ஒரே அன்பு மயமாக இருந்தார். அன்பும் சிவமும் ஒன்று என்பதுதானே சாஸ்திரம்? அன்பைப் பற்றிப் பேசிய ஸ்வாமிஜி அதன்பின் ஓயாமல் சிவத்தைப் பற்றியே பேசி வந்தார். அன்பு, துறவு என்ற இரு மகத்தான லட்சியங்களும் இணைந்திருக்கும் இடமே அர்த்தநாரீசுவரன் என்ற அம்மையப்பன் என்று அழகாகக் கூறினார். ''சிவபெருமான்தான் தெய்வங்களில் பெரிய மகாதேவன். சாந்தன்; சுந்தரன்; மௌனி. மகாதேவனின் மகா பக்தன் நான்'' என்று பெருமை பெருமையாகச் சொல்லிக் கொண்டார்.

அவதாரப் பணி அது, இது என்பதெல்லாவற்றையும் மறந்து, அவனன்றி ஓர் அணுவும் அசையாது, சிவனன்றி ஒரு சிவனும் அசையாது என்ற நம்பிக்கையில் ஆழ்ந்து விட்டார் ஸ்வாமிஜி.

ஒரே திசையில் ஆயிரமாயிரம் அலைகள் பரவும் போது, அவற்றிலொன்று மடிந்து எதிர்த் திசையில் புரள்வதுபோல் ஸ்வாமிஜியின் சிவசாலோக்கிய சாகரமாகிய சிந்தனையில் வேறொரு சிற்றலையும் இடையே மடிந்து விழுந்தது.

ஜூலை மாதம் மூன்றாம் தேதி. ஸ்வாமிஜி ரகசியமாக ஒரு தையற்காரனிடம் சென்றார். அமெரிக்கக் கொடியொன்றினைத் தைத்துத் தருமாறு கேட்டுக் கொண்டார்.

அந்தத் தையற்காரர் ஏதோ தம்மால் முடிந்த அளவுக்குப் பட்டைகளும் நட்சத்திரமும் கொண்ட அமெரிக்கக் கொடியொன்றைத் தயாரித்தார். படகு ஒன்றில் கொடியேற்றம் நடைபெற்றது. மறு நாள் காலை அந்தப் படகில் தமது அமெரிக்க சிஷ்யர்களுக்குத் தேநீர் விருந்து நடத்தி அவர்களை ஆனந்தக் கடலில் மூழ்கடித்தார் ஸ்வாமிஜி.

ஜூலை நாலாம் தேதி அமெரிக்க சுதந்திர தினமல்லவா?

இவ்வளவு நினைவாக, தங்களிடமே சொல்லாமல் ஸ்வாமிஜி தங்களது தாய் நாட்டை நினைவூட்டியதைக் கண்டு அந்தச் சீடர்கள் உள்ளம் உருகிப் போனார்கள்.

அமெரிக்க சுதந்திர தினத்தைக் குறித்து ஓர் அருமையான ஆங்கிலக் கவிதையையும் ஸ்வாமிஜி இயற்றிப் பாடினார். அமெரிக்க அரசியல் சுதந்திரத்தை மட்டும் அவர் மனத்தில் கொண்டிருக்கவில்லை. சம்சாரத்திலிருந்து விடுதலை பெற்று வீடு

பேறு பெறுவதையே உள்ளுறைப் பொருளாகப் பாடினார்.

சரியாக நான்கு ஆண்டுகளுக்குப் பின் அதே ஜூலை நான்காம் நாள்தான் ஸ்வாமிஜி உடலிருந்து விடுதலை பெற்றார்!

ஸ்ரீநகரத்திலிருந்து ஸ்வாமிஜியும் அன்பர்களும் புறப்பட்டனர். அழகழகான பிரதேசங்களில் அழகழகான எண்ணங்களுடன் சஞ்சரித்தனர்.

இஸ்லாமாபாத்தில் ஆப்பிள் தோப்பு ஒன்றில் புல் தரையில் ஸ்வாமிஜியும் சீடர்களும் அமர்ந்திருந்தார்கள். ஸ்வாமிஜி வரப் போவதையெல்லாம் அகக் கண்ணால் கண்டு, தம்மை அறியாமல் இரு கைகளிலும் இரு கூழாங் கற்களை உருட்டியபடியே பேசலானார்:

"சாவு என்னை நெருங்கி வரும் போது எல்லா பலவீனங்களும் மறைந்து விடுகின்றன. எனக்கு அச்சமில்லை; ஐயமில்லை; புறப் பொருட்களைப் பற்றிய எண்ணமும் இல்லை. சாவதற்கு என்னைச் சுறுசுறுப்புடன் தயார்ப்படுத்திக் கொள்கிறேன்." இப்படிப் பேசி வந்தவர் தமது வழக்கத்துக்கு விரோதமாகத் தம்முடைய மகிமையைத் தாமே திடீரென்று எடுத்தியம்பி விட்டார்! கூழாங் கற்களை ஒன்றோடொன்று தட்டி, "நான் இதைப் போலத் திடமாக இருக்கிறேன். ஏனென்றால் நான் ஆண்டவனின் பாதங்களைத் தொட்டே விட்டேன்" என்றார்.

தொட்ட அந்தப் பாதங்களைக் கட்டியணைத்துக் கொள்ள ஸ்வாமிஜிக்கு ஆர்வம் மிகுந்தது. ஒரு நாள் திறந்த வெளியில் அமர்ந்து எல்லோருமாக உண்டு கொண்டிருக்கும் போது ஸ்வாமிஜி திடீரென்று சொன்னார்: "இரண்டாயிரம் மூவாயிரம் யாத்ரீகர்கள் இப்போது அமரநாதத்தில் சேர்வார்கள். அவர்களில் ஒருவனாக நானும் போக விரும்புகிறேன்." ஆண்டவன் பாதத்தை அணைத்துப் பிடிப்பதற்குத்தான்! சிவத்தின் சேவடியைச் சிரத்தில் சூட்டிக் கொள்ளத்தான்!

ஹிமாலயத் தொடரின் மேற்குப் பகுதியில் குன்றுகள் சூழ்ந்து கொஞ்சும் பகுதியாக விளங்குவது அமர நாதம். 'இதய குகையில் வசிக்கும் சிம்மம் இருக்கப் பயமேன்?' என்று ஆதிசங்கரர் பாடிய மஹாதேவன் அங்கு குகையில் எழுந்தருளியிருக்கிறான். அது காரணமாகவே போலும், பயம் என்பதை சற்றும் இல்லாமல் ஆயி




ரக்கணக்கான யாத்ரீகர்கள், கரணம் தப்பினால் மரணம் என்கிற பனிப் பாறைகளைக் கடந்து அவனைக் காண வருகிறார்கள். அஷ்டபந்தனம் செய்த லிங்கம் அல்ல அங்கிருப்பது. தானாகவே இறைவன் ஆவிர்பவித்திருப்பது போல் பனியே இறுகி லிங்க ஆக்ருதியில் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் பரம பாவனமான க்ஷேத்திரம் அமரநாதம். பாவனத்தைப் பருகப் புறப்பட்டு விட்டார் ஸ்வாமிஜி.

நகரும் நகரம் எனச் சொல்லக் கூடிய அடியார்களின் கூட்டத்தோடு ஸ்வாமிஜியின் கோஷ்டியும் சேர்ந்து கொண்டது! ஆம்; நகரும் நகரம்தான்! நூற்றுக் கணக்கான யாத்ரீகர்கள் ஆங்காங்கே கூடாரம் அடித்துக் கொள்வார்கள். உடனே அந்த மலைப் பகுதியில் கடை கண்ணி சகலமும் முளைத்துவிடும். மறு நாள் காலை கூடாரமெல்லாம் இடம் பெயர்ந்து விடும். கடை வீதியும் காணாமல் போய் விடும். காணாமல் போன கடை வீதி இடம் பெயர்ந்த கூடாரங்களிடை மீண்டும் முளைக்கும். காஷாயக் குடை பிடித்துச் செல்லும் சாதுக்கள், அவர்கள் மூட்டும் துனி அக்னி, மற்ற யாத்ரீகர்கள் சமையலுக்காக மூட்டும் தீ எல்லாமாகச் சேர்ந்து இமய மலைக்கே துவராடை பூணச் செய்தது போலத் தோன்றும்.

71

ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரிடமிருந்து ஸ்வாமிஜி பல பாடங்கள் கற்றிருந்தார். அவற்றில் ஒன்று ஆசாரம். மடத்தில் ஏதாவது நடந்து என்றால் சாஸ்திரோக்தமாக

சகல திரவியங்களையும் சேர்ப்பார். சின்னஞ் சிறு விஷயங்களிலும் கூட சம்பிரதாயத்தைக் கடைப்பிடிப்பார். மனையை எப்படிப் போடுவது. தீபத்தை எந்தத் திசை பார்த்து ஏற்றுவது. உண்ணும் போது எப்படி அமருவது என்பவற்றை யெல்லாம் கூட அணுவளவும் முறை தவறாது பின்பற்றுவார். ஒரு கோயில் குளத்துக்குச் சென்றால் சகல விதமான அநுஷ்டானங்களையும் முறைப்படி செய்வார்; கிராமவாசியான ஒரு பெண்மணி எப்படி நம்பிக்கையே உருவமாக நடந்து கொள்வாளோ அப்படி நடந்து கொள்வார். அறிவு வாதம், தத்துவ விசாரம் எல்லாம் அப்போது அவரை விட்டுச் சென்று விடும். சிரத்தையே ஒரு மனித உருவம் தரித்தது போல் க்ஷேத்திராடன காலத்தில் நடந்து கொள்வார். இப்போதும் அப்படியே ஆசார சீலரானார் அந்த ஆசாரிய புருஷர்.

**ப**னி, பனி, பனி...... சகலரயின் தாய்மையை அப்படியே உறைவித்துக் காட்டும் அந்தப் பனி நாற்புறமும் அடுக்கடுக்கான அரண்களாக அமைந்து ரஸிகக் கண்களை யெல்லாம் பனித்துப் போகச் செய்தது. பதினெட்டாயிரம் அடி உயரத்துக்கு வந்தாகி விட்டது. அதோ நூற்றடிக்குக் கீழே அந்த வேத மலைக்கு அணிவித்த பூணூல் போல ஓடுவது காட்டாறாகிய லிடார்தான்.

ஆகஸ்ட் இரண்டாம் தேதி !

வந்தேவிட்டது அமரநாதம்!

ஆனால் இதோ, எப்பேர்ப்பட்ட செங்குத்தான பாறை! அதன் உச்சியை அடைந்தபின் கிடுகிடு பள்ளம். சிறிது சறுக்கி விட்டாலும் பிராணபத்துத்தான்!

உள்ளத்தின் கதகதப்பில், குளிரையும் பொருட்படுத்தாமல் நதியில் ஸ்நானம் செய்தாகி விட்டது. இனி ஒரே ஒரு செங்குத்துப் பாறைதான்.

அப்புறம் குகை. நமக்குள்ளேயே நாம் அறியாமல் ஒளிந்து வாழ்பவன் அந்தக் குகையில் தான் வதிந்திருக்கிறான். குகனை மகனாகப் பெற்ற பரமசிவன் அந்தக் குகையில்தான் வாழ்கிறான். இன்னல் என்பதை மனம் விரும்பி ஏற்காவிடில் தேவ தரிசனம் கிடைக்காது என்பதால்தான், யாத்ரிகர் இத்தனை இன்னலை அநுபவித்த பின்னரே தன்னைக் காணுமாறு தன சமூகத்துக்கு எட்டாக் கையில் ஏகாங்கியாக எழுந்தருளியிருக்கிறான் ஐயன்.

ஸ்வாமிஜி அமரநாதத்தை அடைந்தவுடனேயே ஏகாந்தத்தில் மூழ்க விரும்பினார். மற்ற யாத்ரிகர்களுக்குப் பின் தங்கி, குகையை நோக்கி நடந்தார். பக்தி வெள்ளத்தை உடலின் ஒவ்வோர் அணுவிலும் முடிந்த மட்டும் தேக்கியிருந்த அவர், எப்படித்தான் அந்தப் பளுவுடன் நடை போட்டுச் செல்ல முடிந்ததோ, அதுவே அதிசயம்தான்.

குகை என்பது ஆலயமொன்றையே தன்னுள் அடக்கக் கூடியதாக அவ்வளவு விஸ்தாரமாயிருந்தது. ஆழ்ந்த நிழல் அடர்ந்த கோடியில், அந்த நிழலே சிம்மாதனமானாற் போல பனி லிங்கமாக ஆரோகணித்திருந்தான் ஐயன். தன் மீது வெயிலைப் பெய்து கொண்டு நிற்கும் விருட்சத்தின் நிழலே குளுமையாக இருக்கிறது. அப்படியானால் பனியின் நிழலில் எழுந்தருளியுள்ள கருணாமூர்த்தியின் சந்நிதியில் ஸ்வாமிஜியின் அகம் சில்லிட்டுப் போனதில் அதிசயம் என்ன? திவ்விய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த திருமேனியுடன், கட்டுக் கட்டாகத் தீற்றிய திருநீறு துலங்கும் திருமேனியுடன், பந்தமெல்லாம் பிடிக்காமல் உதறிவிட்டுக் கௌபீனத்தை மாத்திரம் தரித்து எளிமையுடன் விளங்கும் திருமேனியுடன் — ஸ்வாமிஜி அமரநாதனின் முன்பு நின்றதை நினைவு கொண்டு, தாபத்ரயங்களால் அநவரதமும் கொதிக்கும் நமது சித்தத்துக்குத் தண்மை கூட்டிக் கொள்வோம்!

பனித் தரையில் தமது பெரிய சரீரம் முழுவதும்பட விழுந்து தண்டனிட்டார் ஸ்வாமிஜி. அவர் எழுந்திருந்த போது அவரது மார்பில் ஒட்டிக் கொண்ட பனித் துணுக்குகள் உருகினாற்போலவே உள்ளேயும் ஏதோ ஒன்று உருகிக் கொண்டேயிருந்தது.

நூறு நூறு குரல்கள் குகையில் பெருமானின் திருப்பொலிந்த பெருமைகளைத் துதியாக அலை பாய்ச்சின. அவ்வளவு குரல்களும் ஸ்வாமிஜியின் இதயக்குகையிலும் எதிரொலித்தன.

பனி லிங்கம், ஸ்படிக லிங்கம் போல் ஜொலித்துக் கொண்டிருந்தது. எந்த வண்ணத்தைப் பின்னணியில் வைத்தாலும் அந்த வண்ணமாக மாறும் பளிங்கு போல், நாம் 'எது பாவித்திடினும் அதுவாகி வந்தருள் செய்பவன்' அல்லவா ஆண்டவன்? தான் அறிவுக்கனலானவன் என்பதைக் காட்டுவதே போல் வைரமாக ஜ்வலித்தான். ஆனால் இந்தக் கனலிடம் வெப்பமில்லை. தான் கருணை வடிவானவன், அருட்புனலானவன் என்பதையும் அதே போதில் மெய்ப்பிக்கும் பனியாக அல்லவா அவன் விளங்குகிறான்? ஆவியானது எப்படிக் குளிர்ச்சி அடைந்து பனியாக உறைகிறதோ, அப்படியே உருவற்ற பரம்பொருள் அன்பனின் பக்தியில் குளிர்ந்து லிங்கமாக உருப் பெறுகிறது என்பதை விளங்கிக் கொண்டிருந்தான் அமரநாதன்.

அவனைக் காணக் காண ஸ்வாமிஜியின் உள்ளம் மேன் மேலும் சில்லிட்டுக்கொண்டே வந்தது. உடம்பு சில்லிட்டால் எப்படி மரத்துப் போகிறதோ அப்படியே உள்ளமும் மரத்துப் போகத் தொடங்கியது. ஆம், வெளியுலகைப் பொருத்த மட்டில் மரத்துப் போய் விட்டது. ஆனால் உள்ளுலகிலோ மலர்ந்து கொண்டிருந்தது. அந்த மலர்ச்சியில், தேவியும் திருமாலும் அர்ச்சித்த திருப்பாதங்கள் தெரிந்தன. வேண்டி விரும்பிய பாதத்தை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு விட்டார்!

சாகாமையாகிய அமரத்துவத்தை அமரநாதன் தனக்கு அளித்து விட்டான் என்று ஸ்வாமிஜியின் உள்ளம் ஆர்ப்பரித்தது. 'உடலில் இருக்கு மட்டும்தானே சாவு? உடலை விட்டுச் சாகாமையை எய்த வேண்டியது தான்' என்றும் அவர் துடித்திருக்க வேண்டும்!

ஸ்வாமி விவேகாநந்தர் தாம் யார் என்பதை ஐயமற உணர்ந்து விட்டார். ''நரேன் தான் யார் என்பதை அறிந்து விட்டானேயாகில் அதன்பின் அவனால் உடலில் வசிக்க முடியாது'' என்று பரமஹம்ஸர் மொழிந்














Kalzana

பம்பாய் ஸ்ரீ கே. எஸ். மகாதேவன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி கே. எம். ராமசுப்ரமணியம் (ரமேஷ்) B. Sc., B. E., அவர்களுக்கும், கோயமுத்தூர் அட்வகேட் எஸ். எஸ். வெங்கடசுப்பய்யர் குமாரத்தி சௌபாக்யவதி நிர்மலாவுக்கும் கோயமுத்தூரில் திருமணம் சமீபத்தில் நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!





நான் மதக் கோட்பாடு எதற்கும் ஆட்பட்டவனல்ல. எனினும் — இது மதக் கோட்பாடோ அல்லவோ — நான் மனிதர்களின் உள்ளார்ந்த ஆன்மீகத்தை நம்புகிறேன். தனி மனிதனுக்கென உள்ளார்ந்த ஒரு பெருமை உண்டென நம்புகிறேன்.

இருந்தார் அல்லவா? அப்படிப்பட்ட ஓர் அநுபவம் அவருக்கு அமரநாதத்தில் கிடைத்து விட்டது. அவரது உடல் எப்படிச் சாண் துணி போக மிகுதி யெல்லாம் திகம்பரமாயிருந்ததோ, அதே போலத் தமது உள் தன்மையையும் திகம்பரமாகக் கண்டு விட்டார் அவர். அதிலும் ஒரு சாண் துணி சுற்றியிருந்ததால்தான் அவர் அப்போதே உடலை உடைத் தெரியாமல் இருந்தார்! இதன்பின் அவரைப் பரிசோதித்துப் பார்த்த வைத்தியர் ஒருவர், "ஏறக்குறைய மரணத்தையே நீங்கள் அடைந்திருக்கிறீர்கள்! அப்போது உங்கள் இதயம் கூட இயற்கைப்படி நின்றிருக்க வேண்டும். அப்படி நடவாததால் தான் அது வீங்கிக் கொண்டிருக்கிறது" என்றார்.

மகோன்னதமான மலைகளின் அடியில் வாழ்ந்த மகாதேவன், ஸ்வாமிஜிக்கு மகத்தான உணர்வைத் தந்த போதிலும் ஸ்வாமிஜியோ அவனது மகிமையைவிட எளிமையையே பெரிதாக மதித்தார். அமரநாதனுக்கு விசேஷமான ஆடை, ஆபரண, அலங்காராதிகள் கிடையா. வருஷத்தில் பெரும்பாலான நாட்கள் அவன் நித்தியப்படி பூஜை கூட இல்லாமல் ஏழையாக வாழ்கிறான். அவனுக்கு மன்னர் யாரும் பிரும்மாண்டமாக ஆலயம் எடுக்க வில்லை. சித்தர்களும், வேதவித்தர்களும் அவனை ஆடம்பரமாக பிரதிஷ்டை செய்ய வில்லை. இவையேதான் ஸ்வாமிஜியின் சிந்தனையில் நிறைந்திருந்தன.

சிவபெருமானை நேருக்கு நேர் கண்டு, தம்முட் கொண்ட ஸ்வாமிஜி அதன்பின் சில நாட்களுக்கு சிவம் சிவமென்றே பேசி வந்தார்.

சிவதரிசனத்தின் பெரும் பலன் ஸ்வாமிஜிக்குக் கிட்டத் தொடங்கிற்று: அம்பிகையிடம் அவர் உள்ளம் திரும்பியது! அம்பிகையில் ஈசனும் ஈசனில் அம்பிகையும்தான் நிறைந்தாக வேண்டும். சிவபெருமானுடைய வலப் பக்கத்திலிருந்து இடமாகத் தரிசனம் செய்து வரும்போது, அவனது கேச பாரமும், சர்ப்ப குண்டலம் பூண்ட வெண் செவியும், நிலவுச் சாற்றால் செய்தாற் போன்ற கன்னப் பிரதேசமும், யோகத்தில் மிதக்கும் சாந்த விழியும் ஒன்றன்பின் ஒன்றாக வரும். சட்டென்று வெண்மையை அழுத்திக் கொண்டு குளிர் நீலக் கதிர்கள் தோன்றும். ஐயனின் நேரே நிற்கும் போது இந்த வெண்மையும் நீலமும் கலவாதிருக்கவென்றே சமைத்த அணையாக அவனது நாசிகை தோன்றும். இடப்புறத்தில் செல்லச் செல்ல—யோகத்தில் மிதக்கும் விழிக்குப் பதிலாகக் கருணையில் குளித்த ஒரு குளிர் விழி தெரியும். வலது புறத்தில் நிலவுக் கன்னம் எனில், நிலவைத் தாங்கும் இரவைப் பிசைந்து செய்தது போன்ற நீல கபோலம் இங்கு தெரியும். சர்ப்ப குண்டலம் பூண்ட செவியை வலப்புறத்தில் கண்டோமெனில் இங்கோ, பிரணவ ரூபமான ஓலையைத் தரித்த திருச்செவி தெரியும். அதன்பின் அந்த ஓலையைத் தழுவிப் பார்க்கும் சுகந்தமும் பளபளப்பும் கொண்ட குழல்கள். ஈசுவர தரிசனம் அம்பிகையில்தானே முடிய வேண்டும்? அன்பில் தொடங்கினால் அது அழகில் தானேபோய்முடியவேண்டும்?

சக்தியைச் சித்தத்தில் தேக்கிக்கொண்டு விட்டார் ஸ்வாமிஜி. சிவபெருமானைத் தியானித்து மலைபோல் விளங்கிய ஸ்வாமிஜி, இப்போது மலையின் தவழும் கொடியான மலை மகளைப் பற்றி நினைக்கத் தொடங்கியவுடன் குழந்தையாகித் துவளத் தொடங்கி விட்டார். "நான் எங்கு திரும்பினாலும் அம்பிகையைக் காண்கிறேன். என் விரல்களோடு ஐந்து பட்டு விரல்கள் கோத்துக் கொண்டிருக்கின்றன. என்னை அந்தக் கை எங்கோ இட்டுச் செல்கின்றது. தாயை நம்பிக் குழந்தை செல்வது போல் நான் செல்கிறேன். அந்தப் புஷ்பக் கரம் சர்வேசுவரியுடையது அல்லது என் குருநாதனுடையது" என்று கூறினார்.

ஆசாரியனும் அம்பிகையும் வேறு வேறு அல்ல என்பதே சாஸ்திரமும், அநுபவமும்.

திரை விலகி தீபாராதனம் காண்பது போல் சித்தம் அறுந்து விழுந்து அநுபவ தீபத்தில் திவ்விய மாதாவின் தரிசனம் கிட்டித் தானாக வேண்டும் என்று ஸ்வாமிஜி உறுதியாயிருந்தார். இதே உறுதியுடனே ஒரு மாலையில் படகுப் பயணம் செய்த ஸ்வாமிஜி சித்தத்தை எப்படிச் செலுத்தினால் அது தன்னையே மாய்த்துக் கொள்ளும் என்று சோதித்துப் பார்த்தார். சூழலிலுள்ள அழகினைச் சிந்தித்தார். அன்பினைச் சிந்தித்தார். அழகையும் அன்பையும் செய்த அறிவைச் சிந்தித்தார். தரிசனம் கிட்டவில்லை.

படகிலிருந்து இறங்கித் தனியிடத்தே அமர்ந்திருந்தார். எண்ணத்தைப் புதிய வழியில் செலுத்தினார். உலகத்தில் அழகும், அன்பும் மட்டும்தானா இருக்கின்றன? கோரமும், பயங்கரமும் இல்லையா? இன்பத்தைப் போலவே — அல்லது இன்பத்தையும் விட அதிகமாகவே — துன்பம் இல்லையா? நன்மையை விட அதிகமாகத் தீமை இல்லையா? இப்படி உலகத்தில் காண்கிற நன்மை — தீமை, இன்பம் — துன்பம், அழகு — கோரம், அன்பு — பயங்கரம் எல்லாமே பொய்தான். ஆனால் இந்தப் பொய்யிலேயே நன்மை, இன்பம், அழகு, அன்பு இவற்றைக்கொண்டுமட்டும்மெய்ப்பொருளைப்

பற்றுவதற்கு உலக மதங்கள் வகை செய்கின்றன. மெய்மையைத் தொட்ட பின் பொய்யும் மெய்யின் ஒரு தோற்றம் என்று காண முடிகிறது. தீமையிலும் துன்பத்திலும் மெய்ப்பொருளை அநுபவிக்க முடிகிறது.

இந்நிலை மதத்தின் முடிவு. ஆனால் தொடங்கும்போது ஏன் அழகையும், அன்பையும், இன்பத்தையும், நன்மையையும் கொண்டு மட்டும் சத்திய தரிசனத்துக்குப் பாடுபட வேண்டும்? ஏன் கோரத்தையும், பயங்கரத்தையும், துன்பத்தையும், தீமையையும் திவ்விய தரிசனத்துக்குச் சாதனங்களாக்கக் கூடாது?

இப்படிச் சிந்தித்தார் ஸ்வாமிஜி. வெளியுலகம் அமைதி அழகில் ஆழ்ந்திருந்த அந்த அந்திப் போதில் அவருடைய உள்ளம் புயலாய் இருந்தது. அவர் அமைதியில்மட்டுமின்றிப் புயலிலும் தேவியை உணர முயன்று கொண்டிருந்தார்!

ஆர்வமே உருவமான அவரது முயற்சி சித்திப்பதற்குக் கேட்பானேன்? இருளையும், இன்னலையும், அச்சத்தையும் நினைத்தே அம்பிகையிடம் பறந்து விட்டார் அவர். மின்சார உற்பத்தி யந்திரத்தில் சிக்கிக் கொண்டாற்போல அவரது உடல் துடிதுடித்தது. மூலாதாரத்திலுள்ள குண்டலினி விறுவிறுவென்று மேலே ஏறத் தொடங்கி விட்டது. அமர நாதத்தில் கிட்டிய அடர்ந்த சைவாநுபவத்துக்கு ஈடாக இப்போது சாக்தாநுபவம் கிட்டியது. தெய்வ மாதாவின் திவ்விய தரிசனமும் கிட்டிவிட்டது!

அந்தத் தரிசனத்தைக் கண்டு உள்ளம் நிரம்பிக்கொண்டிருக்கும்போதே அவருடைய இனிய உள்ளத்தில் தான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற வேண்டும் என்ற அருட்பான்மையும் எப்படியோ பிடிவாதமாக இருந்தது. அங்கேயே கையைவிட்டுத் துழாவினார். காகிதமும், பென்சிலும் தட்டுப்பட்டன. ஆவேச நிலையில் அவர் எழுதலானார்:

**உடுகணங்கள் அழிந்தன.**
**முகிலுக்கு முகில் மூடியிட**
**இருள் அதிர்கிறது:**
**இரா இரைகிறது.**
**காராகிருகக் கதவம் பிளந்து**
**வெறியர் கோடி வெளிப்பட்டாற்போல்**
**உருமிப் பொருமும் சுழற்காற்றுத்**
**திருகிவிட்ட தருக்கள்விழப்**
**பாதையெல்லாம் பாழாக்க.**

**கடலும் சேர்ந்தது கொந்தளிப்பில்**
**மலையாம் அலைகளை மடித்துச் சுழற்றி**
**கருவான் முகட்டை நக்கிற்று!**
**மின்னல் கொடிகள் ஒளியினிலே**
**திக்குத் திகந்தம் முழுவதிலும்**
**காரிருள் கப்பிய மரணத்தின்**
**கோடி நிழல்கள் குதித்தன.**

**கொள்ளை நோய்கள் கொடுந் துன்பம்**
**அள்ளி இறைத்தே அன்னை நீ**
**ஆனந்த வெறியில் ஆடியே வா!**
**பயங்கரம் என்பதே உந்தன் பேர்**
**மரணம் என்பதே உன் மூச்சு**
**காலமே! சர்வ நாசினியே!**
**காளி அன்னையே கடுகி நீ வா!**

**துயரை விரும்பும் தீரன் எவனோ**
**சாவைத் தழுவும் சூரன் எவனோ**
**நாச நாட்டிய ரசிகன் எவனோ**
**அன்னை அணுகும் அன்பன் அவனே.**

பயங்கரத்திலும் கோரத்திலும் துன்பத்திலும் தீமையிலும் தேவியைக் கண்டு ஸ்வாமிஜி வசன கவிதை பாடியதை எண்ணும்போது மகா கவி பாரதியாரின் 'வெடிபடு மண்டத்திடி' என்ற பாடல் நினைவு வராமல் இருக்காது.

நன்மை, அழகு முதலிய இனிய பொய்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு பக்தி புரிவது போல், தீமை, கோரம் முதலிய இன்னாத பொய்களையும் ஆதாரமாகக் கொண்டு மக்கள் வழிபடவே காளி மாதாவாகப் பரப்பிரம்மம் தோன்றுகிறது என்ற மகத்தான உண்மையை ஸ்வாமிஜி உணர்ந்தார். மற்ற மதங்களைப் போலன்றித் தீமைக்கும் தெய்வத்தைப் பொறுப்பாக்கும் நம் இந்து மதத்தின் தனிப் பெருமை, அன்னை தெய்வத்தையே சம்கார காளியாகக் காணும்போது பூரணமாகிறது என்றுணர்ந்தார். சர்வ சமயங்களிலும் சம்பூர்ணமான அநுபூதி பெற்ற பரமஹம்ஸர் காளியிடம் அனன்யமான பக்தி பூண்டிருந்ததற்கும் இப்போது காரணம் புரிகிறதல்லவா? குருநாதரின் பாவம் இப்போது அப்படியே ஸ்வாமிஜியுடைய சொத்தாகி விட்டது.

கவிதையின் கடைசி வரியை முடித்தானவுடன் பென்சில் அவரது கையிலிருந்து எங்கோ நழுவியது; காகிதமும் நழுவியது. அவரது உள்ளமும் உடலிலிருந்து நழுவியது. உடல் இருந்த இடத்திலேயே கீழே சரிந்தது. காளி மாதாவுடன் ஒன்றியிருக்கும் சமாதி நிலையில் ஆழ்ந்துவிட்டார் ஸ்வாமிஜி.

மஹா மாயையின் இருளையிலும் எவ்வாறோ ஸ்வாமிஜி சமாதி நிலை கலைந்தெழுந்தார்.

இதன் பின் சில தினங்களுக்கு 'சக்தி சக்தி சக்தி சக்தி சக்தி' என்றே ஓதிவந்தார் ஸ்வாமிஜி. "நாம் பயங்கரத்தை வணங்குவோம்; பயங்கரத்துக்காகவே வணங்குவோம்" என்பார்.

"செருக்கு, சுயநலம், ஆசைகள் இவற்றைச் சாம்பலாக எரிக்கும் சுடுகாடாக மனத்தை ஆக்கிக் கொள்ளுங்கள். அப்போது—அப்போது மட்டுமே — அந்தச் சுடுகாட்டில் அம்பிகை வருவாள்" என்பார்.

ஈசுவரனை மயானத்தில் இருத்திப் பார்ப்பதன் தத்துவம் இப்போது புரிகிறதல்லவா?

**ம**னிதர்களில் நாம் ஒருவரின் நல்ல, தீய குணங்களைப் பார்த்து, நல்ல குணங்களையே கொண்டாடுவது போல் ஒரு 'தயாள' மனப்பான்மையை ஆண்டவன் விஷயத்திலும் காட்ட முற்படுகிறோம். மாயா தத்துவம் மகா ஞானியருக்கும் புலப்படாதபோது, அந்த மாயையில் அடங்கிய உலகில் நிகழும் சில நன்மைகளை மட்டும் கடவுள் செயலாகக் கருதிக் கடவுளின் கருணைக் குணத்தை மட்டும்

# கால்கேட் பேபி பவுடர்*

**விசேஷமாக உங்கள் குழந்தைக்கெனவே ஒரு பிரத்தியேகமான பவுடர்.**

உங்கள் குழந்தை ஒரு தனிச்சிறப்புகொண்டது—எல்லா விதத்திலும் விசேஷமானது. விசேஷமான ஆகாரம், விசேஷமான உடைகள். ஏன்? விசேஷமான பவுடர் கூடத்தான்—கால்கேட் பேபி பவுடர்!

கால்கேட் பேபி பவுடர் உங்கள் குழந்தையின் மென்மையான சருமத்திற்கென பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டது. அவ்வளவு மிருதுவானது—அவ்வளவு மழமழப்பானதும், இக்கனமானதும் கூட.... குழந்தைகள் கால்கேட் பேபி பவுடரை விரும்புகின்றன—நீங்களும்கூட அதையே விரும்புவீர்கள்!

New
COLGATE
BABY
POWDER

ரூ.7000
பரிசுகளாக
ஜெயிப்பதற்கு!

## உங்கள் செல்லக் குழந்தை ரூ. 1,000 ஜெயிக்கக்கூடும்

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இதுதான்: பின்வரும் வயதுப் பிரிவுகளில் ஏதேனும் ஒன்றுக்குட்பட்ட உங்கள் குழந்தையின் (முழு முகத்தின்) மிகச் சமீபமாயெடுத்த போட்டோ ஒன்றை அனுப்புங்கள்: • 1½ வயதும், அதற்குக் கீழ்ப்பட்டதும். • 1½ வயதிலிருந்து 3 வயதுவரை. போட்டோவை கால்கேட் பேபி பவுடர் ஜார் அல்லது அவுன்ஸ் சைஸ் டப்பியின் மூடியுடன் பின்வரும் விலாசத்திற்கு அனுப்பவும்:

**கால்கேட் பேபி பவுடர் புகைப்படப் போட்டி**
**தபால் பெட்டி நம்பர் 1955, பம்பாய்-1.**

**விதிகளும், கட்டுப்பாடுகளும்:**

1. நீங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட போட்டோக்கள் அனுப்பலாம்; ஆனால் ஒவ்வொரு போட்டோவுடனும் கால்கேட் பேபி பவுடர் ஜார் அல்லது அவுன்ஸ் சைஸ் டப்பியின் மூடியொன்று அனுப்பவேண்டும்.
2. மகாராஷ்டிர ஸ்டேட் விமன்ஸ் கௌன்ஸிலின் 5 அங்கத்தினர்கள் அடங்கிய குழு ஒன்று போட்டியின் முடிவை நிர்ணயிக்கும். அவர்களுடைய தீர்ப்பே முடிவானது, எல்லோரையும் கட்டுப்படுத்தும்—இது சம்பந்தமாக எந்தவிதமான கடிதத்தொடர்பும் அனுமதிக்கப்படமாட்டாது.
3. ஜூலை 31, 1964ல் முடிவுபெறும் இந்தப்போட்டியில் கால்கேட்-பாமாலிவ் (இந்தியா) பிரைவேட் லிட்., மற்றும் கிரான்ட் அட்வர்டைஸிங் இன்க்., இவைகளின் ஊழியர்கள் கலந்துகொள்ளத் தகுதியற்றவர்கள்.

**பரிசுகள்**

| 1½ வயதிற்குக் கீழ் | 1½ வயதிலிருந்து 3 வயது வரை |
|---|---|
| முதல் பரிசு: ரூ. 1,000/- | முதல் பரிசு: ரூ. 1,000/- |
| 50 ஆறுதல் பரிசுகள் ரூ. 50/-வீதம் | 50 ஆறுதல் பரிசுகள் ரூ. 50/-வீதம் |

# நீங்கள் வாங்குகிறீர்கள்....
# ஆயுட்காலம் முழுவதும் கவலையற்ற தையல்
# ஆயுட்கால ஸிங்கர்* சேவை
# ஒவ்வொரு மெர்ரிட்* தையல் மெஷினுடனும்

மெர்ரிட் தரும் உன்னதங்களை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்—கஷ்டமில்லாத வேகக் கட்டுப்பாடு, வழவழப்பான, நிசப்தமான இயக்கம், நுட்பமான டென்ஷன் கட்டுப்பாடு. ஏனெனில் மெர்ரிட் மிகவும் உறுதியானது; இருப்பினும் சீராக 'பாலன்ஸ்' செய்யப்பட்டது.

இத்துடன் மெர்ரிட்டின் மற்றொரு மேன்மை—இதனுடன் நீங்கள் எந்த ஸிங்கர் கடையிலிருந்தும் வியாபாரியிடமிருந்தும் பிரபலமான ஸிங்கர் சேவையை நம்பியிருக்கலாம்.

எளிதான ஸிங்கர் தவணை முறைத் திட்டத்தில் உங்கள் அருகாமையிலுள்ள அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரியிடமிருந்தோ கடையிலிருந்தோ இன்றே ஒரு மெர்ரிட் வாங்குங்கள்.








எமிமேக்
ஆர்ட்நிட்டர்
ஆடொமாடிக் கைநிட்டிங் மெஷின்கள்



மெர்ரிட்
டேபின், ஸீலிங்
மின் விசிறிகள்



மெர்ரிட்
மின்சார
இஸ்திரிப் பெட்டி

* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட்மார்க்

SS. G. 9 Tam

# அடுத்த பிறவியில்

ராஜம் கிருஷ்ணன்

சந்திலுள்ள முப்பத்தெட்டுக் குடித்தனங்களும் திடுக்கிட்டு ஓடி வரும்படியாக ரங்கம்மா கூக்குரலிட்டாள்.

''நான் ஒண்ணுமே சொல்லாமலிருக்கையிலே இப்படிக் கல்லைத் தூக்கிப் போட்டு விட்டாளே? நான் என்ன செய்வேன்? ஏழைக் குழியில் போட்டு விட்டு, ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும்தான் பிச்சை என்றிருந்தேனே? அடி...... குழு......!''

கையிலே ஒரு துண்டுக் காகிதத்தோடு அவள் கூவியபோது சந்து முற்றத்திலே குஞ்சு குளுவானிலிருந்து கிழவர்கள் வரையில் கூடி விட்டனர்.

''என்னது? என்னம்மா? குழுவுக்கென்ன? காலையில் இருந்தாளே?''

பல குரல்கள் பல கேள்விகளில் பதைபதைப்பை வெளியிட்டன. ரங்கம்மா பூவும் பிஞ்சுமாகத் தன் ஏழு மக்களைக் குழியில் போட்ட போதோ, அல்லது, குமாஸ்தாவாகவே இருபத்தெட்டு ஆண்டுகளை ஓர் அலுவலகத்தில் ஓட்டி விட்டு அவள் கணவன், அந்த ஓய்வுப் பணம் ஐயாயிரம் ரூபாயையும் பாரிச வாயுப் படுக்கையில் கழிக்க விழுந்தபோதோ கூட அவள் இப்படிக் குரல் எழுப்பவில்லை. அந்தப் பணத்தை செல்லாம் கரைத்த திருப்தியோடு நோய் அவருடைய உயிரோடு அகன்றது. அப்போதுகூட அவள் இப்படிப் பதறவில்லையே?

''பதினெட்டு வயசு இதற்கா வளர்த்தேன்? ருக்கு? பண்டிதரையா? நான் ஒண்ணுமே சொல்ல வில்லையே?....''

''அடா இங்கம்மா? காகிதம் எழுதி வச்சிட்டுப் போயிருக்கிறதா? என்ன சமாசாரம்மா?''

''எனக்கு ஒண்ணுமே புரியலையே, பண்டிதரையா? பதினெட்டு வயசு இதற்கா வளர்த்தேன்?''

ரங்கம்மா விக்கி விக்கிச் சொற்களே எழும்பாத துயரத்தை வெளியிட்டாள். தகப்பன் இறந்ததும் பத்தாவதுகூட முடிக்காத பிள்ளை வரதன் எங்கோ வடக்கே போனான். ஆறு மாசங்கள் கழித்து இரண்டு மாசம் முப்பது ரூபாய் பணம் அனுப்பி விட்டு, அங்கேயே கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டதாகவும், இனிப் பணம் அனுப்புவதற்கில்லை என்றும் எழுதினானே, அப்போதுகூட ரங்கம்மா வாய் திறந்து துயரம் தெரிவிக்க வில்லையே?

''இங்கேதான் படுத்திருந்தாள் கயிற்றுக் கட்டிலிலே, நேத்துக் காலையிலேயிருந்து. சாயங்காலம் நான் மாவரைக்கப் போனபோது தலை வார ஆரம்பித்தாள். திரும்பி வரும்போதும் தலை பின்னவில்லை.''

''பின்னிக்கலியா, குழு. வகிடில்லாமல் வாரக் கூடாது. சாயங்கால வேளை. நல்ல இல்லை. வாரிப் பின்னிக் கொள்ளடி'' என்றேன்.

''தரித்திரம், நல்ல ரிப்பனும் நாலு பின்னும் வாங்கக்கூட வழியில்லே'ன்னு சீப்பைத் தூக்கிப் போட்டாள். கத்தினேன். அழுதாள். என்ன செய்வேன்? நீங்கள் சொல்லுங்கள் மரகதத்தம்மா? ஆசைப்படும் வயசு. நல்லது பொல்லாதது வாங்கிக் கொடுக்க எனக்கு வகையில்லே. வாங்கித் தரேனென்று நாம் சொல்ல மாட்டேனா? நச்சுச் சொல்லாக, 'அழாதே, ஆகாதம்மா! என்ன செய்வது. உன் அதிர்ஷ்டம் விடிய மாட்டேனென்கிறதே' என்று சொல்வேனா? விடியாமலே போய்விட்டாளே? இதோ பாருங்களேன்... பண்டிதரையா?'' காகிதத் துண்டை அவர் வாங்கிக் கொண்டு தம் மனைவியை மூக்குக் கண்ணாடி கேட்டார்.

''ஆறு மணிக்குக் காப்பியில்லாத போனால் தலை வலி தாங்காது. நான் தெற்கு வீதி டிப்போவுக்காவும் போலாமுன்னு அஞ்சு



மணிக்கே எழுந்து போனேன்: அப்போது படுக்கையில் குப்புறப் படுத்திருந்தாளே? பால் அங்கேயும் கடனுக்குக் கிடைக்கலே. எங்கெங்கோ போய் விட்டு ஆழாக்குப் பாலோடு வந்தேன், படுக்கை இருக்கு. கிணற்றடி, ரூமாடி, வாசல், வெளியே எங்கும் காணோம். சீப்படியிலே இந்தக் காகிதம் இருக்கு. நான் என்ன செய்வேன்? கோவிந்தா....''

பண்டிதரையா வாய்விட்டே அந்தக் காகிதச் செய்தியைப் படித்தார். கிறுக்கலும் குளறலுமாக, ஒன்பதாம் வகுப்பில் மூன்று முறை 'கோட்டடித்து' நின்று விட்ட குமுதா எழுதியிருந்த செய்தி இதுதான்.



''நான் இனித் திரும்பி வராத இடத்துக்குப் போகிறேன். நீ இங்கே சௌக்கியமாக இரு.—குமுதா!''

ஓர் அபலைத் தாயைக் கலக்கக் குறி பார்த்துச் சொற்களைப் பிரயோகம் செய்திருந்ததை எண்ணியவராகப் பண்டிதர் சிரித்தார்.

ரங்கம்மா அழுதாள்.

''அழாதீர்கள் அம்மா! அதெல்லாம் எங்கும் போயிருக்காது. இந்தக் காலத்துப் பிள்ளைகள் பூச்சி காட்டுகிறார்கள்'' என்றார்.

''ஆமாம். வெறும் பயமுறுத்தல்!''

''கேட்டியா கலிகாலத்தை? அம்மாவைச் சௌக்கியமா இருக்கச் சொல்லி இருக்கிற திமிரைப் பாரேன்?''

''கிடக்கிறது கழுதை. ரங்கம் மாமி! வீணாகக் கிடந்து ஏன் அழுகிறீர்கள்! நன்றாய்த்தான் இருக்கிறது, நீங்கள் இதற்கு அழுவது! எங்கும் போயிருக்க மாட்டாள். தானே பட்டினி கிடந்து அடங்கி ஓடி வருவாள்!'' என்றாள் ருக்கு.

''ஐயோ, இல்லையடி. அவள் வீம்புக்காரி. மகா வீம்புக்காரி. நான் கோபமாகத்தான் ராத்திரி பேசியிருக்கிறேன். நல்ல வாரக்காக பணமா செலவு? ஏதோ ஆசை, எப்படி வேண்டுமானாலும் வாரிக்கொள்ளட்டுமென்று இருந்திருக்க மாட்டேனா? எத்தனை நாட்களோ இருந்ததில்லையா? கோபம், பாவம் என்று நினைப்பேனே.....'' அவளுடைய துயரத்துக்கு அளவே போட முடியாது போலிருந்தது. ஆனால் அங்கே மற்றவர்கள் எவருக்கும் அவள் துயரம் நியாயமாகப் படவில்லை. படிப்புமில்லாமல், ஒரு வேலை செய்ய வணங்காமல், சினிமா பார்க்கவும் கண்ட நாவல் கதைகளைப் படிக்கவுமே பிறவி என்று அம்மா உடலை வருத்தி உழைப்பதைப் பார்த்துக் கொண்டிருந்த பெண்ணை, ஒரு குற்றம் சொல்லாமல் தன்னை நொந்து கொள்கிறாளே என்ற ஆத்திரம்கூட அந்தப் பார்வையாளர்களுக்கு வந்தது.

''அளவுக்கு மீறிச் செல்லம் கொடுத்தே குட்டிச்சுவராக்கினீர்கள் மாமி!'' என்று குஞ்சம்மா கூசாமல் கூறினாள்.

''ஏண்டி, குஞ்சு! சமுத்திரத்தில் விழுந்திருப்பாளோ? மின்சார ரயிலில் போயிருப்பாளோ? எனக்கு ஒன்றுமே புரியலையே? எங்கே போய்த் தேடுவேன்?'' என்று பிரலாபித்த ரங்கம்மாவைக் கடைக்காரக் கோவிந்தன் அதட்டினாற்போல் பேசினான்.

''பேசாமல் கம்முனு இருங்கம்மா, காசு கை எடுத்துக்கிட்டுப் போயிருக்குதா? அதைப் பாருங்க!''

''காசா....?''

ரங்கம்மா மலைத்து நின்றாள்.

காசுதான் அவளிடமே இல்லையே? பாலுக்கு மூன்றணா சில்லறை இல்லாமல் தானே அவன் எங்கோ குப்பம் வரை போய்க் கடனுக்கு வாங்கி வந்திருக்கிறான்? தேதி இருபத்தெட்டு. இனி ஒன்றாந் தேதி வந்தால்தான் வக்கீல் வீட்டுச் சம்பளம், அரைவை கூலி எல்லாமாகக் கிடைக்கும்.

பார்வையாளர் எவருக்கும் சுவாரசியம் நீடிக்கவில்லை. அவள் பிராணனை விட்டிருப்பாள் என்றோ, விடப் போகிறாள் என்றோ அங்கிருந்த ஒரு பிராணியும் நம்பத் தயாராக இல்லை. எனவே, ரங்கம்மாளுடன் அவளைக் கடற்கரையிலோ, ரயில் தண்டவாளத்திலோ தேடத் தயாராகப் புறப்படவில்லை.

ஆனால் யாரும் துணை வரவில்லை என்று ரங்கம்மா குறைப்படவில்லை. தன்னைத் தவிர வேறு எவரையும் குறை கூறும் பழக்கமே அறியாதவள் அவள்.

அதோ, கருப்பு வாயில், பூப்போட்ட தாவணி. அவள் இல்லை. கையில் புத்தகமல்லவோ வைத்திருக்கிறாள் இந்தப் பெண்?

பாய்ந்தோடி வந்தவள் வெறிச்சிட்ட கண்களோடு நின்று விட்டாள்.

''பாவிப் பெண் போயிருப்பாளோ? போய்விட்டாளோ? ஒன்றுமே தெரியலையே?''

வயிற்றுச் சங்கடத்தை அமுக்கிக் கொண்டு பீதியின் நிழல் அவளை ஆட்கொண்டு விட்டது.

''குமு.... அடி, குமு! நான் ஒன்றுமே சொல்லவில்லை. காப்பி குடிக்காமல் நீ போவாயா? நீ கேட்ட புடவையை இந்த மாசம் வாங்கிக் கொடுக்கத்தான் ஒரு வாரமாக அரை கூலி வாங்கவில்லை. பெற்ற பூக்கள் எல்லாம் வேண்டாம் என்று ஒதுக்கிய பஞ்சையானாலும் எனக்கும் ஒரு மனசு இருக்கிறதடி, கண்ணே! நீ எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று எனக்கு ஆசை தெரியுமா? வக்கீல் பெண் கலியாணத்துக்குப் புடவைகள் சாணகலம் ஜரிகை போட்டு வாங்கி யிருந்தார்கள். குமுவுக்கு இப்படி வாங்கிக் கொடுக்க வேண்டுமே என்றுதான் நினைத்தது மனசு. நீ கயிற்றுக் கட்டிலில் உச்சி மேட்டைப் பார்த்துக் கொண்டு படுத்திருக்கையில் இதே மனசு எப்படிச் சங்கடப் பட்டிருக்கிறது என்பதை நீ அறிவாயா? பாவாய்ப் பொழியும் விளக்கோடு, முத்தொளிர முகமலர நீ கொழிக்க நான் பார்ப்பதை எண்ணிக் கொண்டிருந்ததனால், நீ படிக்கவில்லை என்று எல்லோரும் குறை சொன்ன போதும் ஒப்பவில்லை. எடுத்த புத்தகம் வாசிக்கத் தெரிந்திருந்தால் போதாதா? உத்தியோகத்துக்கு உன்னை அனுப்பவா நான் துடித்துக் கொண்டிருந்தேன்? நீ அம்மாவுக்கு ஒத்தாசை செய்யவில்லை என்று என் காது கேட்கக் கூறினார்கள். நான் அரைக்கவும் இடிக்கவும் பிறந்தது போல் நீயும் பிறந்திருக்கிறாய் என்று நானே ஒப்புவேனா? ஓர் அம்மா அப்படி நினைப்பாளா? எனக்கு நீ எதற்கம்மா ஒத்தாசை செய்ய வேண்டும்? நான் செருப்பாக உழைக்கப் பிறந்தவளாகிப் பழகியவள். செருப்பு தாங்கும் பூம்பாதமாயிருக்காமல் என்னை உதறி விட்டுப் போய் விட்டாயே? குமு.....! அடீ..... குமுதா?''

வெய்யில் உக்கிரமாகக் கொளுத்த வலுத்து விட்டது.

''குமு....பஞ்சையானாலும் உன் அம்மா, உன்னை ஒரு நல்ல பையனின் கையில் பிடித்துக் கொடுக்க வேண்டுமென்று ஆயிரம் ரூபாய் வரையில் சேர்த்துச் சேர்த்து ராமுவிடம் கொடுத்து வைத்திருக்கிறேனே? எங்கே போய் விட்டாயடி?'' பட்டணத்துச் சமுத்திரத்திலே இழந்து விட்ட நம்பிக்கையை உயிர்ப்பித்துக் கொண்டு ஒரு துரும்பு போல அவள் எங்கென்றுதேடுவாள்? ஒரு பஸ்ஸா? ஒரு ரயிலா?

'குமு குமு' வென்று கண்களில் கட்டிக் கொண்டிருந்த உருவைக் காணாமல் நமுவி விட்ட ஏக்கம் பெரும் சுமையாக அவள் சந்துக்குள் வந்தபோது மணி ஏழடித்து விட்டது. ஒரு சபலம்.

வீட்டிலே வந்து காத்திருக்கிறாளோ?

அந்தி திரும்பி முடங்கிய அந்தனை கூட்டுக் குடும்பங்களும் அவள் வரும் சேதி அறிந்து ஆவலுடன் வருகின்றனரே?

''குமுதம் வந்துவிட்டாளா மரகதத்தம்மா?''

''இல்லையேம்மா குமு வரவில்லையே?''

சப்த நாடியும் ஒய்ந்து விட்டாற் போலிருந்தது.

குறட்டுக் கம்பத்தில் சாய்ந்து உட்கார்ந்த அவளுக்கு இருண்டு வந்தது.

உள்ளே அந்தக் கயிற்றுக்கட்டில் மூளியாக இருந்தது. கொடியில் அவளுடைய பாவாடை, மடித்துப் போட்ட நீலத் தாவணி, ஸில்க் ரவிக்கையெல்லாம் அப்படியே இருந்தன. எப்போதோ அவள் கணவன் ஏலத்தில் எடுத்து வந்த நீளக் கண்ணாடி, வட்ட முகத்தையும் நீளமாகக் காட்டும். குமுவுக்கு அந்தக் கண்ணாடியின் மீது எத்தனை நாட்களோ கோபம் வந்திருக்கிறது. ஆனால் அவள் கோபத்தைத் தாங்கியும், அதன் ஆயுள் கெடவில்லை. அது பார்வையாளரை இழந்து காட்சி யளித்தது. ஜன்னல் தட்டில் பவுடர் டப்பி, சாந்துக் குப்பி, மைச்சிமிழ் இவைகளை விட்டுக் குமு எங்கே போயிருப்பாள்?

அவள் தன் மக்களில், அந்தப் பையனின் மீதும் நம்பிக்கை இழந்த பிறகு, அந்த மகளிடமே நம்பிக்கை வைத்து ஒட்டிக் கொண்டிருந்தாள். தகப்பனும் இறந்த பின் தாய் ஒருத்தியாகவே, எட்டு வருஷங்கள் முழுக்க, முழுக்க உடலைத் தேய்த்துக் கனவு கண்டு அந்த மகளோடு வாழ்ந்திருக்கிறாள். அந்தத் தாயை இன்று வறுமை ஓய வைத்துவிட்டது.

ஆம், ஆசைக்குகந்ததொரு வாழ்வை அவளால் மகளுக்கு அளிக்க முடியாததனால் தானே குமு அவளை உதறி விட்டாள்?

நம்பிக்கையை அறவே இழந்ததும், ரங்கம்மாளின் கேசம் தும்பைப் பூவாய் வெளுத்துப் போய்விட்டது. உடல் தளர்ந்தது. வக்கீல் வீட்டு வேலைக்கும் போவதில்லை. உயிர் தரிக்கக் கல்லைச் சுழற்றும் பணி. உள்ளத்துக்கு ஒட்டம் கொடுக்க, அந்தப் பழைய புடவைத் துணிகள், சாந்துக் குப்பி, பவுடர், கண்ணாடி முதலிய அவளுடைய பொருள்களெல்லாம் நினைவுக் கோயிலின் சின்னங்களாயின. அவள் படித்து விசிறியிருந்த பழைய கதைப் புத்தகங்கள், பாட்டு நோட்டு, எல்லாவற்றையும் சேர்த்து அந்தக் கண்ணாடிக்கு முன்னால் வைத்தாள். காலையில் காப்பி கலந்ததும் ரங்கம்மா அந்தக் கண்ணாடியின் முன் வைத்து அவளுக்கு என்று நினைத்து அளித்த பிறகே அருந்தினாள். குமுதாவுக்குப் பிடித்தமான வேறெதுவும் அவளுக்குத் தேவையே யில்லையே?

பட்டணத்தில் யார் எப்படிப் போனாலும் காலம் ஊர்வது கூட இல்லை. மூச்சு முட்டத்தான் வழக்கம் போல் ஓடியது. குடித்தனக்

# தலைவலியிலிருந்து

## நல்ல, நிச்சயமான நிவாரணம்




# அமஸின்

**சிறந்தது எனெனில் அது**
**4 வழிகளில்**
**வேலை செய்கிறது**

*Registered Users:* GEOFFREY MANNERS & CO. LTD.

கார நண்பர்களின் அனுமானங்களெல்லாம் பொய்யென்றுதான் காலம் நிரூபித்தது.

''ரங்கம்....''

ராமுடுவை அவள் வெகு நாட்களாகவே பார்க்கவில்லையே?

''காந்திபுரத்திலே... நானெக்குக் கொஞ்சம் வேலே, வாயேன்?'' ரங்கம்மா முன் போல் எங்கே வேலே என்று உடனே தேடிக்கொண்டு கிளம்பி விடவில்லை.

உடலே வருத்தி உழைக்கத் தெரிந்த ரங்கம்மாளுக்கு வேறு ஆசையோ, சாமர்த்தியமோ கிடையாது. சமையல் தொழிலிலும் அவள் ஏவல் பணி புரிபவள்தான். ராமுடு அவளேக் கூப்பிட வரும்போதெல்லாம் வந்தழைப்பதுண்டு. குமு போன பிறகு அவள் அம்மாமி விருந்தோ, கல்யாண வீடோ, கொண்டாட்ட வைபவமோ ஒன்றுக்கும் செல்லவில்லை. இனி பணம் சேர்த்து என்ன செய்ய வேண்டும்? என்றாலும், முன்னுளில் அவர் செய்த உதவிகளுக்கு அவர் காட்டிய தயவுக்கு நன்றியாக அவள் குறித்த நேரத்துக்கு, குறித்த வீட்டுக்குச் சென்றாள்.

பெரிய இடம் போலிருக்கிறது. அம்மம்மா, வாசலெல்லாம் கூட்டம் நிரம்பி வழிகிறதே? எவ்வளவு பெரிய தோட்டம்? அங்காங்கு மரத்தடிகளிலெல்லாம் விதவிதமாக மக்கள்— பெரிய கார் ஒன்று — மூடு வண்டி ஒன்று... இரண்டு நின்றன.

இதென்ன பெரிய வக்கீல் வீடோ? அல்லது ஜட்ஜ் பங்களாவோ? வலப்புறம் நாடக அரங்கு போல் ஒரு பெரிய கொட்டகை இருக்கது. 'ஜல் ஜல்' என்ற சலங்கைச் சத்தம், பாட்டு, மத்தள ஒலிகள் எழும்பின. ரங்கம்மா கீற்று மறைவின் ஒருபுறம் சந்து வழியே எட்டிப் பார்த்தாள். ஏழெட்டுப் பெண்கள், வளர்ந்த பெண்கள் நடனமாடிக் கொண்டிருந்தனர். அட கோரமே! வயசுப் பெண்கள் இப்படிக் கோலம் செய்துகொண்டு குதிப்பார்களா? ரங்கம்மாவுக்குப் புரியவில்லை.

சமையற் பகுதியும் கொட்டகையாகவே இருந்தது.

ரங்கம்மாள் கல்லூரலின் கீழ் அமர்ந்ததும் ''ஏன், சாமா? இது நாடகக்காரர்கள்வீடா?'' என்று மெள்ளக் கேட்டாள்.

சாமா சிரித்தான். ''ரங்கம் மாமி எந்த உலகத்திலே? இது நாடகக்காரர்களில்லே.. சினிமா எடுக்கிறவர்கள் வீடு — இங்கே வாசலிலே கூட்டம் பார்த்தீர்களா? ரங்கம் மாமி உங்களைப் போல் ஒரு அம்மா கூட, 'சான்ஸ்' கேட்க வந்திருக்கிறாள்!''

சினிமா என்றதுமே ரங்கம்மாவுக்குக் குமுவின் நினைவு வந்து விட்டது. குமுவுக்குத் தான் சினிமாவுக்குப் போவதென்றால் எவ்வளவு ஆசை! ரங்கம் ரொம்ப நாட்களுக்கு முன்பு பவளக்கொடியும், நந்தனும் ஆடிப் பார்த்திருக்கிறாள். பிறகு அவளுக்குப் போக நேரமில்லை, வசதியும் இல்லை.

அரைத்துக் கரைத்தான பிறகும் அடுப்படியில்தான் அவளுக்குச் சில்லறை வேலே. யார் யார் சாப்பிட்டார்கள் என்பதெல்லாம் அவளுக்குத் தெரியாது.

இலேகளையெல்லாம் வாரிக் கூடையில் போட்டுக் கொண்டு வெளியே வருகையில், மரத்தடிகளிலெல்லாம் முன்போலவே கூட்டம் குறைவில்லாமல் இருந்தது. ஆண், பெண், குழந்தைகள், பல ரகங்கள்.

'கேட் எவ்வளவு தொலேவு!'

ஒரு மரத்தடியில் அதே முழங்கால் பாவாடையும், மேல் கச்சமாக அந்தப் பெண்கள்!

சற்றே அருகில் வந்த ரங்கம்மாளே அதில் ஒருத்தி பார்க்கிறாள். கன்னங்கள் ஒட்டி, கண்களில் கருவளையம் குமு... குமுவா இவள்? சே! குமு திரும்பி வாராத இடத்துக்கல்லவா போய்விட்டாள்? இவள் யாரோ?...

அவள் நிற்கையிலேயே அந்த வளையம் சூழ்ந்த கண்கள் அவளே மீண்டும் பார்க்கின்றன. அந்தப் பார்வை ஆழத்துள் இறங்கி, அறுந்த நரம்பைச் சேர்த்து மீட்டினாற்போல் அவள் உணர்வைச் சுண்டிவிடுகிறது. நாடி நரம்புகளெல்லாம் அதிர்கின்றன. குலுங்கி நிற்கிறது. உயிரை உயிரே மறைத்து விடுமோ? அவள் அப்படியே நிற்கிறாள், எச்சிற் கூடையுடன்.

அவர்கள் அந்த மூடு வண்டிக்குள் போய் ஏறிக்கொள்கிறார்கள். வண்டி பச்சை வாயிலேக் கடந்து, சாலேக்குச் சென்று மறைகிறது.

'இல்லே — இல்லே. அவள் குமு இல்லே. அவள் இப்படி — இதற்காகவா அம்மாவை விட்டுப் போய்விட்டாள்? நிச்சயமாக இல்லே.'

குமுதா, ஒரு கோபச் சொல் தாங்காமல், போய்விட்டாள். அவள் திரும்பி வராத இடத்துக்குப் போய்விட்டாள். கண்ணுக்குள்ளிருந்தவள் மண்ணுக்குள் மறைந்து விட்டாள். அவள் அடுத்த பிறவியில் வக்கீல் வீட்டைப் போலுள்ள நல்ல வீட்டில் பிறப்பாள். பூப்பூவாக மத்தாப்பூச் சொரியும் வைரங்களும் முத்துக்களும் ஜொலிக்க, பட்டுக்கள் பளபளக்க அவள் ராஜகுமாரியாக வளருவாள். அவளேக் கண்ணுக்குள் வைத்துத் தாங்க ஒரு நல்ல பிள்ளே வருவான். குஞ்சும் குழந்தைகளுமாகக் கலகலக்க, பாலாய் ஒளி பொழியும் ஒரு மாளிகையில் ராணி போல் அவள் விளங்குவாள்....

சொத்தைக் கூடையின் குப்பைகளை அடக்க வாசலேப் பாக்கொள்ளைப் போட்டுக் கடித்தாற்போன்று அந்தக் கற்பனேயில் மூழ்கிப் போனாள். வீடு திரும்பியதுமே அவள் அந்தக் கண்ணுடியின் முன் இருந்த பவுடர் டப்பி, சாந்துக் குப்பி, புத்தகங்கள் எல்லாவற்றையும் வெளியே கொண்டு எறிந்தாள். கடைக்காரக் கோவிந்தனுக்கு ஒரே வியப்பு.

''என்ன ரங்கம்மா? இதெல்லாம் குப்பையில் போடுறீங்க? அசல் மகளேப் பார்த்தீங்களா?''

''அவளே இந்தப் பிறப்பிலே பார்ப்பது எப்படி கோவிந்தா? அவள்தான் இந்த ஏழைக் குடிசை வேண்டாமென்று போய் விட்டாளே? அடுத்த ஜன்மத்திலே ஒரு நல்ல....''

ரங்கம்மாள் சொல்ல வந்ததை வாய்ச் சொல்லால் முடிக்காமல் எங்கோ சூனியத்தை நோக்குகிறாள். அந்தக் கற்பனேயில் உள்ளம் முழுகுகிறது.

இதோ... அடுத்த பிறவியில் — ஒரு மாளிகையின் ராணி. ஒரு நல்ல பிள்ளேயின் ஆசை மனேவி. துருதுருக்கும் குழந்தைகள்...

தன் சிநேகிதி லலிதாவிடம் தான் கற்பனையாக, ஜகந்நாதன் தன் கணவன் என்று கூறி அப்படியே நடித்ததானது தன்னை மத்தளமாக்கி விட்டதை எண்ணி மருகினாள் வசந்தா. ஜகந்நாதனோ அவளைச் சீண்டி வேடிக்கை பார்க்க, "நீ ஏன் மத்தளமாகிறாய்?" என்றார்.

"உங்களுக்காக நான் பேனாவாக மாற வேண்டியிருக்கு! லலிதாவுக்காக நான் உங்கள் மனைவியாக நடிக்க வேண்டியிருக்கு!"

"இந்தத் தர்மசங்கடமான நிலைமையை நீயேதானே உண்டாக்கிக் கொண்டாய்? போலித்தனமான பாவனைகள் எப்போதும் சங்கடத்தைத்தான் உண்டாக்கும்! நீ ஆரம்பத்திலேயே உன் சிநேகிதியிடம் உண்மையைச் சொல்லியிருக்கலாம்!" என்ற ஜகந்நாதன், "அதிருக்கட்டும்! உனக்கு உமா என்னும் அக்கா ஒருத்தி இருப்பது உன் சிநேகிதிக்குத் தெரிந்திருக்குமே? அக்காவுக்கு முந்தியா நீ கல்யாணம் செய்து கொண்டாய்; அப்படி என்னடி உனக்கு அவசரம் என்று அவள் கேட்கவில்லையா?" என்றார்.

"இல்லை! அக்காவுக்கு இரண்டு குழந்தைகள் இருப்பதாகச் சொல்லியிருக்கிறேன்!" என்றாள் வசந்தி மெல்ல.

"பேஷ்! பேஷ்!" என்று பாராட்டிய ஜகந்நாதன், "ம்! இப்போது உன் சிநேகிதி நம்பும்படி நாம் இருவரும் கணவன் மனைவி போல் கனகச்சிதமாக நடித்து விடலாம்! ஆனால் காலம் முழுதும் அப்படியே நடித்துவிட முடியுமா? உன் சிநேகிதி ஒரு நாள் உன் வீட்டுக்கு வந்து உன் அப்பா அம்மாவைப் பார்த்து, 'எங்கே உங்கள் மகாபலிபுரத்து மாப்பிள்ளை?' என்று கேட்டால் நீ என்ன செய்வாய்? அதுவும் போதாதென்று அவள் உன் அக்காவின் வீட்டுக்கும் போய்க் குழந்தைகளுக்கு இனிப்பையோ, சட்டைத் துணிகளோ பிரசண்ட் பண்ணினால் என்ன செய்வாய்?" என்றார்.

"அவளுக்கு எங்கள் புது விலாசங்கள் தெரியாது!" என்றாள் வசந்தி.

"இனி உங்கள் புது விலாசத்தைக் கேட்டாலும் நீ பொய் விலாசம் கொடுத்து விடுவாய்! அந்தத் தைரியம் உனக்கு! ஆனால் காலம் எதையும் ஒளித்து வைத்துக் கொண்டிராது. என்றாவது ஒரு நாள் லலிதாவை நீ மறுபடியும் சந்திக்கவே செய்வாய்!"

வசந்தி அப்போதுதான் அதன் பயங்கரத்தை உணர்ந்தவள் போல் கண் கலக்கத்துடன், "உங்களை என் ஹஸ்பெண்ட் என்று ஏன்தான் லலிதாவிடம் சொன்னேனோ? எனக்கே புரியவில்லை!" என்றாள் ஈனமான ஸ்தாயியில்.

"அது விதியா அல்லது உன் மதியா என்று குழம்புகிறாயா?"

"அதையே குத்திக் குத்திக் காட்டாதீர்கள்!"

"சரி! இப்போது ஒன்றும் குடி முழுகிவிடவில்லை! நீ உடனே போய் உண்மையைச் சொல்லி விடு!" என்றார் ஜகந்நாதன்.

அதைக் கேட்டதும் வசந்தி திடுக்கிட்டவளாய், "எந்த உண்மையைச் சொல்லச் சொல்கிறீர்கள்?" என்று பதறினாள்.

வசந்தியை ஜகந்நாதன் ஒரு கணம் உற்றுப் பார்த்துவிட்டு, "நீயும் நானும் உண்மையில் கணவன் மனைவி அல்ல;



# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

நாவல் எழுதுவதற்காகத்தான் இங்கே வந்திருக்கிறோம் என்ற விஷயத்தை உன் சிநேகிதியிடம் சொல்லிவிட்டேன்!'' என்றார் வெகு சாதாரணமாக.

''அதை இப்போது லலிதாவிடம் போய் நான் எப்படிச் சொல்வேன்?''

''உனக்குக் கூச்சமாக இருந்தால் நானே லலிதாவைக் கூப்பிட்டு உண்மையை விளக்கி விடுகிறேன்!''

''ஐயையோ! இப்போது நீங்கள் யாரோ நான் யாரோ என்று சொன்னால் அவள் என்ன நினைப்பாள்? அதுவும் இவ்வளவு தூரம் நடந்து விட்ட பிறகு...?'' என்றாள் வசந்தி மிகுந்த பதை பதைப்புடன்.

''என்ன, எவ்வளவு தூரம் நடந்து விட்டது?'' என்று குதித்த ஜகந்நாதன் ''உன் கழுத்தில் நான் தாலி கட்டி விட்டேன் என்று கூடச் சாதிப்பாய் போலிருக்கிறதே!'' என்று கூறினார்.

''கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்! லலிதாவின் கண் முன்னால் நீங்கள் என்னிடம் எப்படியெல்லாம் நடந்து கொண்டீர்கள்? வளையல் கடையில் நீங்கள் வளையல்களை எடுத்து என் கையில் அணிவித்தீர்கள்! அப்புறம்... அப்புறம்...'' என்று வசந்தி மேலே சொல்ல முடியாமல் வெட்கத்தோடு நெளிந்தாள்.

''அப்படியெல்லாம் நான் நடந்து கொள்ளும்படி நீதான் என்னை ஆக்கி வைத்தாய்! நானும் ஏதோ தமாஷாக நினைத்து அப்படி நடிக்கப் போய் இவ்வளவு தூரத்துக்கு விஷயத்தை 'சீரியஸ்' ஆக்கிவிட்டாய்!'' என்ற ஜகந்நாதன் ஏதோ ஒன்றை யோசித்துவிட்டு, ''சரி! நாம் இருவரும் தம்பதிகளல்ல, வெறும் காதலர்தான் என்று அவளிடம் சொல்வேன்!'' என்றார்.

'ஊஹூம்' என்பது போல் வசந்தி தலையாட்டினாள்.

''ஏன்? தம்பதிகளை விடக் காதலர்களுக்கு கிரேடு குறைச்சல் என்று நினைக்கிறாயா? அந்த நினைப்பே சுத்தத் தப்பு!'' என்று ஆணித்தரமாகச் சொன்ன ஜகந்நாதன், ''பேபி! கூண்டுப் பறவைகளின் குடும்பத் இனிப்பை விட வானத்துப் பறவைகளின் சுதந்திரமான காதல் வாழ்க்கைதான் இயற்கையானது: அதி இனிமையானது!''- என்று ஒரு கொள்கையையும் அதற்கு ஒட்டுச் சேர்த்தார்.

அதை வசந்தி ஒப்புக்கொள்ளவோ மறுத்து விவாதிக்கவோ விரும்பாமல் தன் பின்னலைத் தூக்கி முன்புறம் போட்டுக் கொண்டு அதன் நுனிச் சுருளைத் தன் விரலால் மேலும் சுருட்டி விட்டுக் கொண்டே மௌனமாக இருந்தாள்.

''சரி; நாம் நாவல் எழுதாவிட்டால் இந்த ஹோட்டல் அறையில் நாம் ஏன் அனாவசியமாகத் தங்கியிருக்க வேண்டும்? இப்போதே சென்னைக்குக் கிளம்பிப் போய் விடலாம்!'' என்றார் ஜகந்நாதன் மிகவும் நல்லவர்போல்!

''ஊஹூம்! நாம் சாயந்திரம் வரை இங்கேதான் தங்கியிருக்கப் போவதாக லலிதாவிடம் சொல்லியிருக்கிறேன்! மேலும் நான் அவளுடைய அறைக்கு மாலை டிபன் சாப்பிட வருவதாகவும் வாக்களித்திருக்கிறேன்! இப்போது நாம் திடீரென்று கிளம்பிச் சென்றால் அவள் என்ன நினைப்பாள்?''

''ஏன், அவளுக்காக நாம் பயந்து



கொண்டு பறந்து விட்டோம் என்று பரிதவிப்பாளா?'' என்று கேட்ட ஜகந்நாதன், ''ம், சாயந்திரம் வரை நாம் இங்கே என்ன செய்வது? என்னால் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது! இது முன்பே தெரிந்திருந்தால் சீட்டுக் கட்டாவது வாங்கி வந்திருப்பேன். புது மணத் தம்பதிகள் ஜம்மென்று சீட்டு விளையாடியாவது பொழுதுபோக்கிக்கொண்டிருக்கலாம்!'' என்றார் கேலியாக.

''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது! நாம் இருவரும் நாவல் எழுதுமுன் அதைப் பற்றி நம் மனத்துக்குள் கற்பனை செய்வதிலேயே மௌனமாக நம் நேரத்தைக் கழித்துக்கொண்டிருக்கலாம்!'' என்றாள் வசந்தி மெல்ல.

''பிரமாதமான ஐடியா! நாமிருவரும் ஒன்றாக உட்கார்ந்து நாவலை வரிக்கு வரி 'டிஸ்கஸ்' செய்து எழுத ஆரம்பித்தால் என் எண்ணங்கள்தான் உன் எண்ணங்களில் ஆட்சி செலுத்திக்கொண்டிருக்கும்! அதைவிட நாமிருவரும் தனித்தனியாக அவரவரின் மனோபாவனைக்கு ஏற்றபடி கற்பனை செய்து வைத்துக் கொண்டு பிறகு அவ்விரண்டையும் ஒன்று கலந்து ஒரு நாவலை உருவாக்கினால் அது இன்னும் இயற்கையாகவும் அதியற்புதமாகவும் இருக்கும்'' என்று ஆமோதித்த ஜகந்நாதன் ''பேபி! நீ கதாநாயகியைப் பற்றிக் கற்பனை செய்! நான் கதாநாயகனைப் பற்றிச் சிந்திக்கிறேன்!'' என்றார்.

''கதாநாயகியும் கதாநாயகனும் யார் யார் என்பதை நீங்களே முன்னதாகச் சொல்லி விடுங்கள்!'' என்றாள் வசந்தி ஆவலின் பரபரப்போடு.

''கதாநாயகன் ஒரு டாக்டர்! அதோடு ஒரு நாவலாசிரியர். அதோடு பந்தபாசமில்லாத துறவியைப் போல் இருதயமில்லாத ஆசாமி!'' என்றார் ஜகந்நாதன் 'கண்களைச் சிமிட்டிக் கொண்டே விஷமப் புன்முறுவலுடன்.

அதைக் கேட்டதும் வசந்திக்கு உணர்வெங்கும் ஒரு விறுவிறுப்பு உண்டாயிற்று. அவள் மெல்ல ஜகந்நாதனை ஏறிட்டு நோக்கி, ''அப்படியானால் கதாநாயகி யார்...?'' என்று நெஞ்சு படபடக்கக் கேட்டாள்.

''கதாநாயகி ஒரு கல்லூரி மாணவி. மிகவும் குறும்புக்காரி...''

வசந்தி நிம்மதியாக ஒரு பெருமூச்சு விட்டாள்! அவளுடைய முகம் அளவிலாத பிரகாசமடைந்து அப்போது தான் பூத்த ரோஜா மொக்குப்போல் குலுங்கியது. இனம் புரியாத ஓர் ஆனந்த பரவசத்தால் அவளுக்கு உடம்பெங்கும் ஒரு புல்லரிப்பு உண்டாயிற்று.

அவள் கரகரக்கும் குரலில், ''டாக்டர்...!'' என்று ஏதோ கேட்க நினைத்தாள்.

அதற்குள் ஜகந்நாதன் ஒரு புன்முறுவலுடன், ''ஆமாம், பேபி! நம்முடைய நாவலுக்கு நம்மையே கதாபாத்திரங்களாக ஆக்கிக்கொண்டு கற்பனை செய்வோம்! மனிதன் தன்னையே தன் கண் முன்னால் மூன்றாவது மனிதனாகப் பாவித்துக் கொண்டு விமரிசனம் செய்யக் கூடிய பக்குவம் பெறும்போது தான் அவன் மனம் விரிவடைவதோடு அவனுடைய ஆற்றலும் அதிகரிக்கிறது. அத்தகைய மனோ பக்குவம் நீயும் பெற வேண்டும் என்பதற்காகத் தான் உன்னையே கதாநாயகியாக ஆக்கிக்கொள்ளும் இந்தப் 'பிளாட்டை'ச் சொன்னேன். அதற்கு மேல் உன் மன நிலைகளையும், கதாநாயகி என்ற முறையில் உன்னிடம் டாக்டர் எப்படி எப்படி யெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று நீ எதிர் பார்க்கிறாய் என்பதையும், அவரிடம் நீ எப்படியெப்படியெல்லாம் நடந்து கொள்ளுகிறாய் என்பதையும், அத்தகைய சந்தர்ப்பங்களில் உனக்கு ஏற்படக் கூடிய உணர்ச்சி அலைகளையும், சூழ்நிலைகளையும் கற்பனை செய்து கற்பனை செய்து எழுதி வைத்துக் கொண்டே வா. நான் கதாநாயகனைப் பற்றிக் கற்பனைசெய்து கொண்டே போகிறேன்! பிறகு நாமிருவரும் தனித்தனியாக எழுதியதையெல்லாம் ஒரு நாள் ஒப்பிட்டு ஒன்று கலந்து ஒரு நாவலை உலகத்துக்கு அளிப்போம். அது ஆண்மை, பெண்மை இரண்டின் தத்ரூபமான பிரதிபலிப்புக்கும் பூரணத்வம் உடையதாக இருக்கும்!'' என்று கூறி முடித்தார்.

அதற்கு மேல் வசந்தி எதுவும் சொல்லவில்லை. தன்னைக் கதாநாயகியாகவும், டாக்டர் ஜகந்நாதனைக் கதாநாயகனாகவும், அதாவது தங்களிருவரையும் காதலர்களாகப் பாவித்துக் கொண்டு விதவிதமான சம்பவங்களையெல்லாம் கற்பனை செய்து உள்ளுக்குள் மகிழ்வதிலேயே லயித்துவிட்டாள். அப்போது அவள் தன் மனம் போன போக்குப்படி யெல்லாம் கற்பனை அநுபவங்களைச் சஞ்சரிக்க விட்டு மிகவும் ரசித்தாளே தவிர, அக்கற்பனைக்குக் கடிவாளமோ கட்டுப்பாடுகளோ எதுவும் விதிக்கவில்லை.

''பேபி! நிஜ வாழ்க்கையை விடக் கற்பனையில் எதையும் அனுபவித்துவிடலாம்! அனுபவ சாத்தியமில்லாத எதை

யும் கூட, அடையவே முடியாத ஒன்றையும் கூட எவ்வித சிரமமோ, முயற்சியோ இல்லாமல், வெகு சுலபமாகக் கற்பனையில் அனுபவித்துவிடலாம்! தங்கு தடை இல்லாத அதன் ருசியும், அலாதியாகவும், அதி இனிமையாகவும் இருக்கும்!'' என்று தமாஷாகச் சொன்ன ஜகந்நாதன் தம்முடைய குரலில் ஒரு தீவிரத்தை வரவழைத்துக் கொண்டு, ''வசந்தி! 'கற்பனையால் எதையும் அனுபவித்துத் தீர்த்துவிடு' என்பது ஒரு தத்துவம்! அது ஆத்மவாதிகள் முதல், பேராசைக்காரர்கள் வரை அனைவருக்கும் பயன்படக்கூடிய அபூர்வமான ஒரு தத்துவம்! அதை இன்னொரு சமயம் விளக்குகிறேன்'' என்றார்.

## அத்தியாயம் நாற்பத்தேழு

# காதலின் பாதையிலே

**மா**லை மணி நான்கானதும் வசந்தி தன் கற்பனை உலகத்தை விட்டு எழுந்து லலிதாவின் அறைக்கு டிபன் சாப்பிடச் சென்றாள். அங்கு தன் பிராண சிநேகிதியிடம் அந்தரங்கமாக என்னவெல்லாமோ மனம் விட்டுப் பேசி மகிழ்ந்திருந்து விட்டு மாலை ஆறு மணிக்குத்தான் ஜகந்நாதனின் அறைக்குத் திரும்பி வந்தாள்.

அதன் பின் பொங்கும் கடலில் அமுத கலசம் போல் பால் நிலா உதயமாகும் அழகை ஜகந்நாதன் பார்த்து ரசித்து விட்டு, அந்த நிலா வெளிச்சத்தில் அதிகமாக மினுமினுத்து நெளியும் வசந்தியை ரதம் போன்ற தம்முடைய காரில் ஏற்றிக் கொண்டு மகாபலிபுரத்திலிருந்து சென்னைக்குப் பயணம் புறப்படும்போது இரவு மணி ஏழரையாகி விட்டது.

அவர் காரை ஓட்டிச் செல்லும்போது முன் 'ஸீட்டி'லேயே அவர் அருகில் வசந்தி மௌனமாகப் பொம்மை போல்

---

### தபால் தலைகள்

**'ஸ்**டாம்ப்' சேகரிப்பது ஒரு கலையாக இன்று மதிக்கப்படுகிறது. இதற்காக ஒவ்வொரு நாட்டிலும் கழகங்கள் இருக்கின்றன. விழாக்கள், காட்சிகள் எல்லாம் ஏற்பாடு செய்கிறார்கள். தபால் தலை சேகரிப்பவர்களை 'பிலாடலிஸ்ட்ஸ்' என்று அழைக்கிறார்கள்.

இரண்டாவது உலகப் போரில் வெற்றியடைந்ததைக் கொண்டாட பிரிட்டன் 2 பென்னி மதிப்புள்ள ஸ்டாம்பு 240 மிலியனும் 3 பென்னி மதிப்புள்ள ஸ்டாம்பு 24 மிலியனும் வெளியிட்டது. இவை யெல்லாமே பெரிய அளவில் வெளியாயின. இவ்வளவு ஸ்டாம்புகள் வெளியிட்டும் கூட இப்போது இதன் மதிப்பு ரொம்ப அதிகம்.

இங்கிலாந்தில் ஒரு பொருளை (அவுட்ரைட் ஸேல்) பூரண உரிமைகளோடு விற்பவருக்கு அந்தத் தொகைக்கு வருமான வரியிலிருந்து விலக்கு உண்டு. ஆகவே கள்ள மார்க்கெட்காரர்கள் ஸ்டாம்பு விற்பனை செய்வதன் மூலம் வருமான வரியிலிருந்து தப்பிக்கொண்டு வந்தார்கள். உதாரணமாக 10,000 பவுன் மதிப்புள்ள ஸ்டாம்புகளை வாங்குவார்கள்; அதை 8,000 பவுனுக்கு விற்றுவிடுவார்கள். வருமான வரிக்காரர்கள் 8,000 பவுனுக்கான கணக்குக் கேட்டால், 'நான் என்னுடைய ஸ்டாம்ப் கலெக்ஷனை விற்ற தொகையல்லவா அது!' என்பார்கள்.

ஜனாதிபதி ரூஸ்வெல்டும், ஐந்தாம் ஜார்ஜ் மன்னரும் தபால் தலைகள் சேகரிப்பதில் ரொம்ப ஈடுபாடுடையவர்கள். ரூஸ்வெல்டுக்கு ஸ்டாலின் சில அபூர்வமான ரஷ்ய ஸ்டாம்புகளைக் கொடுத்திருந்தார். ரூஸ்வெல்ட் சேகரித்திருந்த தபால் தலைகளின் மதிப்பு 80,000 டாலர். இது 1946 ஏப்ரலில் 210,875 டாலர்களுக்கு விலை போயிற்று.

ஆர்தர் ஹிண்டு என்பவரின் தபால் தலை சேகரிப்புத்தான் மிகப் பிரபலமானது. இது 114,000 பவுன்களுக்கு ஏலம் போயிற்று. ஆனால் ஒரே ஒரு முக்கியமான ஸ்டாம்பை மட்டும் இந்த ஏலத்தில் விடவில்லை. இது ஒரு செண்ட் மதிப்புடைய பிரிட்டிஷ் கினியா ஸ்டாம்ப். இந்த ஒரு ஸ்டாம்ப் மாத்திரம் 10,000 பவுன்களுக்கு விலை போயிற்று. கர்னல் கிரீன் என்பவர் சேகரித்திருந்த தபால் தலைகள் நியூயார்க்கில் 400,000 பவுன்களை அள்ளிக் கொடுத்தன.

ஸ்டாம்புகளை அச்சடிக்கும்போது ஏற்படும் சிறு தவறுகள் அந்த ஸ்டாம்புக்கு ஏகமான மதிப்பைக் கொடுத்துவிடும். சமீபத்தில் நம் நாட்டில் கூட இம்மாதிரி தவறு நேர்ந்துள்ளதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். இன்னும் கொஞ்ச நாள் கழித்து இந்தத் தவறுள்ள தபால் தலைக்கு நல்ல யோகம் அடிக்கும்.








அமர்ந்திருந்தாள். கார் ஓடும் வேகத்தில் அவளுடைய உடம்பு குலுங்கியதென்றா லும் அவள் தன் பின் தலையை ஸீட்டின் மீது அழுத்திச் சாய்த்துக் கண்களை மூடிக் கொண்டு தன் உள்ளுணர்வுகளி லேயே லயித்திருந்தாள்.

அவளை ஜகந்நாதன் கடைக்கண் ணால் கவனிக்க ஆரம்பித்ததும் காரை மெதுவாக ஒட்ட ஆரம்பித்தார்.

வசந்தி தன் இருதய அரங்கில் தன்னை யும் ஜகந்நாதனையும் காதலர்களாக நடமாட விட்டு வித விதமான கற்பனை களெல்லாம் செய்து மகிழ்ந்து வரு கிறாள் என்பதை அவளுடைய மூடிய கண்ணிமைகளின் படபடப்பிலிருந்தும், அவளுடைய பக்குமையான முகத்தில் படரும் வித விதமான உணர்வுகளி லிருந்தும், அவளுடைய இதழோரங் களிலிருந்து வெளிப்பட முயலும் ரசனையான புன்சிரிப்புக்களிலிருந்தும் நெஞ்சின் விம்மல்களிலிருந்தும், அவ ளைச் சுற்றிலுமே கனன்று நிற்கும் ஒரு வித ஆனந்தப் பரவசத்திலிருந்தும் ஜகந்நாதன் தெளிவாகவே புரிந்து கொண்டார்.

மாய மந்திரத்தால் கட்டுண்டு நூறு வருஷங்கள் தூங்கிய அரசிளங்குமரியை அம்மாயக் கனவிலிருந்து ராஜகுமாரன் தட்டி எழுப்பி நிகழ்காலத்துக்குக் கொண்டு வருவது போல் ஜகந்நாதன் பெரிதாகக் கனைத்து, "வசந்தி!" என்று பெரிதாகவே குரல் கொடுத்துக் கூப்பிட்டார்.

ஆனந்தமயமான அறிதுயிலிலிருந்து வசந்தி மெல்லக் கண்ணிமைகளைத் திறந்து, தன் தலையை ஸீட்டிலிருந்து தூக்காமலே முகத்தை ஒரு புறமாகச் சாய்த்து, ஆசையில் சொடுக்கும் விழி களால் ஜகந்நாதனை ஏறிட்டுப் பார்த் தாள். ஆனால் அந்தப் பார்வை ஒரு கணந்தான்! அடுத்த கணம் ஜகந் நாதன் அர்த்த புஷ்டியுடன் மென் னகை புரிவதை உணர்ந்ததும் வசந்தி தூக்கி வாரிப் போட்டுக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"என்ன பேபி, தூக்கமா?"

"ம்!..." என்று வசந்தி மெல்லத் தலையாட்டினாள்.

"அதற்குள்ளாகவா?"

"ம்!"

"பொய்! கற்பனைக்கு நீ கருநி கூட்டு கிறாய்!"

வசந்தி மெல்லச் சிரித்தாள்.

"வசந்தி! உன்னிடம் ஒன்று கேட்க லாமா?"

வசந்திக்கு விறுவிறுத்தது: "என்ன.. கேளுங்கள்..." என்று அடிக் குரலில் இழைந்தாள்.

"உன் சிநேகிதியின் அறைக்கு நீ டிபன் சாப்பிடப் போய் இரண்டு மணி நேரம் கழித்துத்தான் திரும்பி வந் தாய்! இரண்டு இளம் பெண்கள் தனி மையில் அப்படிப் பொழுது போவது தெரியாமல் சுவாரஸ்யமாகப் பேசு கிறார்கள் என்றால் அது காதல் விஷய மாகத்தான் இருக்கும்; இல்லையா?"

"ஆமாம்! நம் காதல் பிறந்து வளர்ந்து கல்யாணத்தில் முடிந்த கதையெல்லாம் லலிதா கேட்டாள்!"

"அதற்கு உன் உசிதம் போல் வெகு ரசமாகக் கதை திரித்திருப்பாய்! அப்புறம்...?"

"அப்புறம் என்ன?"

"அவளும் தன் காதல் விஷயத்தை உன்னிடம் சொன்னாளா? காதலையும் தும்மலையும் மறைத்து வைக்க முடி யாது என்பது ஐதிகம்! லலிதாவைப் போன்ற ஒரு வெகுளிப் பெண்ணின் உள்ளத்தில் காதல் துறுதுறுத்துக் கொண்டிருந்தால் தன் அந்தரங்க சிநேகிதியைக் கண்டதும் தன் மனத் தில் உள்ளதை யெல்லாம் கொட்டி விடத் தோன்றும்!"

வசந்தி வியப்புடன், "ஆமாம். அவள் நம் பிச்சுமணியைக் காதலிக் கிறாளாம்!" என்றாள்.

"நம் பிச்சுமணியையா? யார், மேஜர் வீட்டுப் பையனையா?" என்று ஜகந்நாதன் திகைப்புடன் கேட்டார்.

"ஆமாம்; அந்த அசட்டுப் பிச்சு வைத்தான்! அவனுடைய தாத்தாவின் வீர பரம்பரை ஜாதியில் லலிதாவைப் போல் அவனுக்கு ஒரு பெண் கிடைப் பது அபூர்வமாம்! அதனால் அவ னுடைய தாத்தாவும், லலிதாவின் அப்பாவும் முன்கூட்டியே திட்டமிட்டுப் பிச்சுமணியையும் லலிதாவையும் தனி யாகக் கன்னியாகுமரிக் கடற் கரைக்கு உலாவ அனுப்பினார்களாம்!" என்று உற்சாகமாகச் சொல்ல ஆரம்பித்த வசந்தி, கன்னியாகுமரி கடற்கரையில் பிச்சுமணிக்கும் லலிதாவுக்குமிடையே நிகழ்ந்ததையெல்லாம் லலிதா சொன் னது போலவே வெகு அழகாகச் சொல்லிவிட்டு, "பாவம், லலிதா! அவனை உயிருக்குயிராய்க் காதலிக் கிறாள்!" என்று ஒரு பெருமூச்சுடன் முத்தாய்ப்பும் வைத்தாள்.

"அதுபோல் பிச்சுமணியும் லலிதா வைத் திருப்பிக் காதலிக்கிறானா?"

(தொடரும்)

# மில்க் ஆப் மக்னீஷியா என்பது என்ன?

**இது மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைடின் எமல்ஷன். அமில நாசினியும் மலமிளக்கியுமான இது இரைப்பை சம்பந்தமான (அஜீரணக்) கோளாறுகளின் சிகிச்சையில் ஏராளமாக உபயோகப்படுத்தப்படுகிறது.**

மில்க் ஆப் மக்னீஷியாவிற்கு, மெக்னீஷியம் ஹைட்ராக்ஸைட் மிக்ஸ்சர் B.P., மெக்னீஷியா மாக்மா யு.எஸ்.பி., க்ரீம் ஆப் மக்னீஷியா B.P. போன்ற பெயர்களும் உண்டு. எப்பெயரால் அழைக்கப்பட்டாலும் இதன் அடிப்படையான பொருள் ஒன்றே. மேலும் ஒரு அங்கீகாரமான ஔஷதகரண விதியின் கண்டிதமான நியதிக்கும், பிரமாணத்திற்கும் தக்கபடி இது உற்பத்தி செய்யப்படுகிறது. இது எந்த வர்த்தகப் பெயரில் விற்பனை செய்யப்பட்டாலும் சரி அப்பெயர் தயாரிப்பாளரை சுட்டிக் காட்ட அனுகூலமாகுமே தவிர இதன் தரத்தை உயர்த்தவோ, தாழ்த்தவோ செய்யாது.

இருந்த போதிலும், விற்பனைப் பெயர், வாடிக்கையாளரை பொறுத்த மட்டில் மிகவும் முக்கியம். ஏனென்றால் நன்கு தெரிந்த ஒரு பெயர் அவருக்கு தயாரிப்பாளரின் நம்பகத்தன்மையைப் பற்றி உறுதியளிக்கிறது. இக்காரணத்தினால் தான் கணக்கற்ற வாடிக்கையாளர்கள் அன்றாடம் 'மந்த்' (MandH) மில்க் ஆப் மக்னீஷியாவை வாங்குகிறார்கள். இது யுனைடெட் ஸ்டேட்ஸ் ஔஷதகரண விதிகளின்படி தயாரிக்கப்பட்டு குணத்திற்கும் தரத்திற்கும் நன்கு பரிசீலனை செய்யப்படுகிறது. ஆகையால் இதன் தரமும், தூய்மையும் கேள்விக்கு இடமற்றதாக விளங்குகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, மற்ற எல்லா 'மந்த்' (MandH) தயாரிப்புகளைப் போலவே, மருந்துகள் தயாரிப்பதில் 50 வருடங்களுக்கு மேலாக உள்ள அனுபவத்தின் சிறப்பையும் பெற்றுள்ளது.



# உனக்கா? எனக்கா?

ராஜேந்திர குமார்

ஆவலுடன் பார்த்தார்கள் சிலர்.

ஜாடையாகக் கவனித்தவர் பலர்.

''இந்த முகத்தை எங்கேயோ பார்த்திருக்கிறோமே'' என்று அலட்சியமாகத் திரும்பியவரின் தலைகள் விசுக்கென்று மீண்டும் திரும்பிப் பார்த்தன. தெருவில்...

பயில்வான் நண்டுப்பிடி நாதமுனி அலட்சிய நடைபோட்டு வந்து கொண்டிருந்தான்.

''ரோஷமான குத்துச் சண்டை. தஞ்சை நகரமே இதுவரையில் கண்டிராத மாபெரும் மோதல். சென்னையில் வெற்றி வாகை சூடிய 'நண்டுப் பிடி' நாதமுனியின் தனிகரச் சவால்'' என்ற தலைப்பில் சுவருக்குச் சுவர் பெரிய போஸ்டர்களையும், அதில் தெரியும் தனது 'கோதா' போஸையும் கண்டு...

பெருமையுடன் நிமிர்ந்த அவன் நெஞ்சு சட்டெனத் தொய்ந்தது. நிமிர்ந்ததற்குக் காரணம் பிடிபடாத பெருமை. தொய்ந்ததற்குக் காரணம், இவ்வளவு விளம்பரம் செய்து விட்டார்களே! அன்று ஆட்டம் முடியப் போகும் முறையை நினைத்ததும் அவனுக்குப் பெருமூச்சுத்தான் வந்தது. ஏனென்றால்...

அவனுக்கும் 'நாக்கவுட்' நாராயணசாமிக்கும் ஏற்பட்டிருக்கும் ரகசிய ஒப்பந்தத்தின்படி அந்த ஊரில் தோற்க வேண்டியது நாதமுனியின் முறை. ஆனாலும் என்ன செய்வது? ஆனைப்பட்ட சென்னையிலேயே அதுவும் இவனுடைய அஜாக்கிரதையின் காரணமாக இலேசிலே ஜெயிக்கக்கூடிய சூழ்நிலை ஏற்பட்ட போதும்கூடப் பெருந்தன்மையாய் விட்டுக் கொடுத்து உதை வாங்கி உதவினானே! அதை எப்படி மறக்க முடியும்?

நீண்ட பெருமூச்சு ஒன்றை வெளியேற்றி விட்டு நின்றிருந்த 'நண்டுப்பிடி' யாரோ தனது ஜிப்பாவை இழுப்பதை உணர்ந்து ஆத்திரம் முழுவதையும் காட்டி ஓர் உதறு உதற...

அவனது சட்டைப் பையிலிருந்து வரும் 'மாலோகா' செண்டின் நறுமணத்தை அநுபவித்துக் கொண்டிருந்த அந்தக் கன்றுக்குட்டி தள்ளி விழுந்து துள்ளி எழுந்து ''சீ...ச்...சீ!'' என்றது.

வெலவெலத்துப் போனான் நாதமுனி. அற்பக் கன்றுக்குட்டியா எதிர்ப்புத் தெரிவிக்கிறது? அதுவும் இவ்வளவு காட்டமாக?

எட்டி ஓர் உதை விட்டான்.

மறுபடியும் ''ஐயாவ்... ஐயாவ்... என்னுங்கறேன்? கை நீளுது?'' என்று ஆவேசமாகக் குரல் வரவே அந்தப் பக்கமாகத் திரும்பியவன் திடுக்கிட்டுப் போனான். பேசியதும், எதிர்ப்புத் தெரிவித்ததும் அந்த அற்பக் கன்றுக்குட்டியல்ல. தலையில் இளநீர்க் கூடை ஏந்திய அந்தக் காரிகை என்பதை உணர்ந்து தெளிந்தான். ''இந்தக் கன்றுக்குட்டி உன்னதா?''

''இல்லே. என் பாட்டிது! ஆளைப் பாரு!'' என்று சீறினாள் அவள். ''என்னா! ஆளைப் பார்த்தா பயில்வான் கணக்கா யிருக்கிறே. அந்தக் குட்டி மேலே உம்ம பலத்தைக் காட்டறீரே!''

''ஸாரி... ஸாரி'' என்றான் அவன்.

''சரி, சரி'' என்றாள் அவள். ''நகரு. நான் வியாபாரத்தைக் கவனிக்கணும்'' என்று கூறிவிட்டுத் தனது 'ஸைடு பிஸினெ'ஸான இளநீர் வியாபாரத்தைக் கவனிக்கலானாள்.

''பெரிய கோவக்காரி போலத் தோணுதே...?''

''தோணுறது என்ன? எனக்கு மட்டும் கோவம் வந்துச்சு... வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுதான். ஆமாம்'' என்று கையில் இருந்த இளநீர்க்காயை ஒரே வீச்சில் இரண்டு துண்டுகளாகப் பிளந்து உள்ளேயிருந்த வழுவலை வழித்து வாங்கிய ஒருவரிடம் நீட்டினாள்.

அவளை அவனுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. ஏதாவது பேச வேணுமென்று மறுமுறை அவன் இளநீரைச் சீவும்போது ''பொன்னா... பொன்னா...'' என்றபடி திரும்பினான் போலியாக.

''அட தெரியும் போ! என்னமோ புதுசா சொல்றீரு!'' என்றாள் அலட்சியமாக. ''இது அந்த வயிலேயிருந்து அரிவாள் பிடிச்ச கையாக்கும்.''

''ஆமா! இந்தா உன்னைத்தானே! என்னைக் கண்டதுமே பயில்வான்னு கரெக்டா சொல்லிட்டியே. எப்படி? என் ஆட்டத்தை எங்காச்சும் பார்த்திருக்கியா?''

''சீ...சீ! நான் சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னேன்'' என்றவள் தனது பெரிய கண்கள் விரிய அதிசயத்துடன் கேட்டாள்: ''அப்ப நீ நிஜமாகவே பயில்வான்தானா?''

நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போல் இருந்தது நாதமுனிக்கு. ''சந்தேகம் வேறயா சந்தேகமாயிருந்தால் அந்தப் போஸ்டரைப் பாரு. அப்புறம் சொல்லு.''

''ஆமாங்!'' என்று வியந்தாள் அவள்.

''நாளைக்குச் சாயங்காலம் ஆட்டம். வருவியில்லே!''

''சீ...சீ... வேலை வெட்டியத்த ரெண்டு பேரு 'பொக் பொக்'குன்னு குத்திக்குவாஙுவ. அதைப் போய் ஏன் காசு வேறு கொடுத்துப் பார்க்கணும்?''

''அது சரி!'' என்றவன் சொன்னான்: ''ஓசி டிக்கட் தரேன்.''

''ஆங்!'' என்று ஒரு விநாடி யோசித்தவள் சொன்னாள்: ''நானும் பல்கி பார்த்ததே யில்லே! வாரேன்.''

''ஐயோ! பஸ்கி இல்லேம்மா! ஆஸ்தி!'' நாதமுனி கேட்டான்: ''உன் பேரு என்னுங்கறேன்?''

''கவுரி'' என்று திருவாய் மொழிந்த அந்தக் கௌரி கேட்டாள்: ''இளநீர் குடிக்கிறியா?'' என்று கேட்டுவிட்டு ஓர் இளநீரைச் சீவித் துண்டம் போடலானாள்.

க் க் க்

''இதெல்லாம் கூட உனக்குப் பழக்கமா அண்ணாச்சி!'' என்று வேணுமென்றே ஆச்சரியப்பட்டான் நாதமுனி.

குனிந்து நிமிர்ந்து தண்டால் எடுத்துக் கொண்டிருந்த 'நாக்கவுட்' நாராயணசாமி ''இன்னும் கூட பஸ்கி தண்டால் எல்லாம் எடுப்பேன். ஆனால் இப்ப எல்லாம் வயசாயிடுச்சு பாரு. உடம்பு வளையறதில்லே.''

''என்ன வார்த்தை சொல்லிட்டீரு மாஸ்டர். உனக்கா வயசாயிடுச்சு? உருட்டி விட்ட உருண்டைக் கிழங்கு மாதிரியில்லே ஜம்முன்னு இருக்கே! நீயே இப்படிச் சொல்லிட்டா நாங்களெல்லாம் என்ன ஆகிறது?''

நாராயணசாமி தன் மீசையை உருவி விட்டவாறு ஒரு விநாடி யோசித்தான். ''ஆமா! என்னுங்கறேன்! என் தலைமேலே காக்காயா பறக்கிறது? என்ன விஷயம்?''

''விஷயம் என்னு? ஒண்ணுமில்லே!'' இளித்தான் நாதமுனி. ''அண்ணே! ஒரு வொதவி.''

''என்னு?''

''இந்த ஊரை நமக்கு விட்டுக் கொடுத்திடேன்!''

''ஏன்?''

''வெவகாரமிருக்கு. அதனாலேதான். வந்து அடுத்தாப்போல போறு மதுரை, திருச்சி, செங்கோட்டை எல்லாத்திலேயும் நீ தள்ளிக்கிணுபோ. இந்த ஊர் மட்டும்...என்னண்ணே யோசிக்கிறீங்களா?''

''சே..சே.. அதென்ன பேச்சு? உனக்கில்லாத ஊரா?... தாராளமா கெலி! அக்கறை யில்லே.''

நாதமுனிக்குக் கால் தரையிலே பாவவில்லை.



''குட்டி!'' ஆச்சரியத்துடன் அழைத்தான் நாதமுனி. ''கன்றுக்குட்டி!''

கன்றுக்குட்டி திரும்பிப் பார்த்து ஓடி வந்து தனது மோவாயைத் தலையினால் இலேசாக அவனை ஒரு முட்டு முட்டி விட்டுச் செல்லம் கொஞ்சியது.

''யாரையா அது என்னைப் பார்த்துக் குட்டி என்கிறது?'' என்று குடிசைக்குள்ளிருந்து வெளிப்பட்டாள் அந்தக் கௌரி. ''ஆஹா! நீரா? இங்கிட்டு எங்கே வந்தீரு?''

''இதுவா உன் வீடு?''

''இல்லே. என் பாட்டிது! ஆளைப் பாரு!'' என்று முகத்தை வலித்துக் காட்டியவள் சொன்னாள். ''எங்கப்பனைப் பார்த்திட்டுப் போகலாம்னு வந்தேன். ஏதோ அவசர சோலியா மதுரைக்குப் போயிருக்கிறாராம். சொன்னாங்க. இப்ப நான் அவசரமாப் பார்க்கணுமே!''

''ஏன்?''

''இளநீர் குடிச்ச சில பயலுங்க விவகாரம் பண்றாங்க. காசு குடுக்க மாட்டேன்னு மல்லுக்கு நிக்கிறாங்க.''

''அது யாரவன்?... டாய்!...'' என்று சென்னை முறையில் கோதா தட்டிக் கத்தினான். ''ஆளைக் காட்டு. பந்தாடிப் போடறேன்!'' என்றான்.

''வாங்கறேன்.''

சற்றைக்கெல்லாம்...

''ஆனாலும் நீ ரொம்பத் தைரியசாலிங்கறேன். அந்த பசங்களையும் பஞ்சாப் பறக்க விட்டுட்டீரே!'' என்று கௌரி கூறியதை நினைத்து நடை துள்ள, நெஞ்சு கிளுகிளுக்க வந்து கொண்டிருந்த நாதமுனியை...

''தம்பி.. தம்பி டோய் நாதமோனி!'' என்று அழைத்தவாறு லொங்கு லொங்கென்று ஓடி வந்த நாராயணசாமி அவன் தோள் மேல் கையைப் போட்டுச் சொன்னான். ''டேய் நாதமோனி! மன்னிச்சுக்கோடா தம்பி! காலையிலே நான் சொன்னப்படியே இந்த ஊரை உனக்கு விடறதுக்கில்லே!''

''ஆஹ்!'' அயர்ந்து போனான் நாதமுனி. ''அதென்ன பேச்சுங்கறேன்!''

''ஆமாண்டா. இந்த ஊரை மட்டும் நமக்கு விட்டுடு. அடுத்துப் போற இருச்சிலை நீயே ஜெயிச்சுக்க.'' நாதமுனி கெஞ்சிப் பார்த்தான். கொஞ்சிப் பார்த்தான். அவன் எதற்கும் அசையாமல் போகவே மிஞ்சிப் போனான். ''அதென்ன அது சொன்ன வாக்கு மீர்றது ஒரு பெரிய மனுஷத்தனமா?''

''டேய்! என்னடா முறைக்கிறே?'' மீசை மேல் கை போட்டான் நாராயணசாமி. ''நீயுந்தாண்டா இந்த ஊரை எனக்குத் தர்றதாகச் சொல்லி வாக்கு மீறினே! அதென்னமோ நான் விடமாட்டேன்.''

இருவரும் கொஞ்ச நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துப் பல்லைக் கடித்துவிட்டுச் சட்டென விலகி இவன் வழியே இவன் போனான், அவன் வழியே அவன் போனான்.

''தே! இந்தா! உன்னைத்தானே?'' ஓடி வந்தான் நாதமுனி. ''கன்றுக்குட்டி..''

கன்றுக்குட்டி பின்தொடர, தலையில் பால் குடத்துடன் ஒய்யாரமாக நடந்து போய்க் கொண்டிருந்த கௌரி திரும்பிப் பார்த்தாள்.

'என்னுங்கறேன்! அங்கே கோதாவை 'அம்போ'ன்னு விட்டுட்டு இங்கே வந்து நிக்கீரு? ஏன், பயந்து போயிட்டீரா?''

''பயமா? ஹூம்!'' என்று உறுமியவன் சொன்னான்: ''உன்னண்டை ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்! ஆமாம், எங்கே போறே?''

''பாலுக்குத் தண்ணி ஊத்த...'' என்றவள் சட்டென்று திருத்திக் கொண்டாள். ''வாடிக்கைக்குப் பாலு ஊத்த.''

''அது கெடக்கட்டும்.'' அவசர அவசரமாகக் கேட்டான்: ''அப்போ நீ குஸ்தி பார்க்க வரல்லேயா?''

''வாரேனே.''

''ஐயய்ய... இன்னிக்கு வேணாம். நாளைக்கு வா!'' என்றான். அந்த ஊரிலேயே ஒரு நாள் ஆட்டம்தான்.

''ஏனுங்கறேன்?''

''இன்னைக்கு நான் ஆடல்லே.''

''அம்புட்டுத்தானு? சரி! சரி!... எனக்கு இஷ்டமில்லே. ஏதோ நீ சொன்னியேன்னு வர்றதாயிருந்தேன். நீயில்லாமல் என்ன ஆட்டம்? நான் வர்றலே!''

''கடைசியாச் சொல்றேன் தம்பி. பேசாம ஜகா வாங்கிக்க. இல்லே...'' என்று பயமுறுத்தியும் அவன் பணியாமல் போகவே நாராயணசாமி கெஞ்சினான். ''இந்தா பாரு நாதமோனி! நான் முதல்லே இந்த ஊரிலே யாருமே இல்லையாக்கும்னு நெனைச்சுத்தான் சரி சொன்னேன். ஆனா பாரு. நேத்து பஸ் ஸ்டாப்பிலே என் மாமனைப் பார்த்தேன். இந்த ஊரிலேதான் இருக்கானும். அதோட கிளி மாதிரி ஒரு பொண்ணையும் பெத்து வச்சிருக்கான். குஸ்திக்கு வாயேன் மாமான்னேன். சரி ஆகட்டும்டான்னார். அவரெதிரிலே தோத்துப்போனால் மதிப்பாயிருக்குமா? நீயே சொல்லு.''

தனது காதல் விவகாரத்தைச் சொல்லலாமா என்று ஒரு விநாடி எண்ணிய நாதமுனி, அவள்தான் வரமாட்டாளே என்ற தைரியத்தில் ''சரி வாத்தியாரே! நீயே ஜெயி'' என்று விட்டுக் கொடுத்தான்.

கூட்டம் 'ஓ'வென்ற இரைச்சலுடன் ரசித்துக் கொண்டிருந்தது. கைதட்டலும், உய்...உய்... விசில் பின்னணியுடனும் மூன்றாவது ரவுண்டு முடிந்தது.

இரண்டு ஆட்டங்களிலும் நாதமுனி தனது பிரபல 'நண்டுப்பிடி' பிடித்து நாராயணசாமியை மண் கவ்வச் செய்துவிட்டான். அது அவர்களின் ஒப்பந்தத்தின் நியதி. தோற்க வேண்டிய நபரின் கை முதல் மூன்று நான்கு ஆட்டங்களில் ஓங்கும். பிறகு மெல்ல மெல்லத் தணிந்து தேய்ந்து போய்விடும்.

நான்காவது ரவுண்டு முடிந்து நாராயணசாமியின் 'நாக்கவுட்டு'களைத் தாங்க முடியாமல் திணறியவாறு உட்கார்ந்து கூட்டத்தின் பக்கமாகப் பார்த்தவன் அகஸ்மாத்தாகத்தான் கவனித்தான். கும்பலுக்கு நடுவே அமர்ந்து ''போடேய்... குத்தேய்..'' என்று கத்திக் கொண்டிருந்தாள் கௌரி.

'பாவி வரமாட்டேனென்று சொல்லிவிட்டு வந்து உட்கார்ந்திருக்கிறாளே' என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே 'டிங்' என்று மணி அடித்தது. பாய்ந்தானே ஒரு பாய்ச்சல்!




மறக்காமல்
கேட்டு வாங்குங்கள்

**ஸ்பென்ஸர்ஸ்**
**கிரைப் ஸிரப்**

குழந்தைகளின் ஜீரணக்
கோளாறுகளுக்கு
துரித நிவாரணி

ஸ்பென்ஸர் & கோ., லிட்.,
தரமான மருந்துகளைத்
தயாரிப்பவர்கள்
153, மவுண்ட் ரோடு,
சென்னை - 2

---

# tik-20

# டிக்-20

## மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது



டாடா-பைஸன் தயாரிப்பு




கெயிகி
டயஸிஜுன்

ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள் :
ராலிஸ் இந்தியா லிமிடெட்

# ஒவ்வொரு குடும்பமும் வாங்கக்கூடிய
# உயர் ரக டால்கம் பவுடர்!




# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்

## குளுமையானது, நறுமணமிக்கது, புத்துணர்ச்சி யூட்டுவது

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் குடும்பத்தினர் அனைவரும் எல்லாப் பருவ காலங்களிலும் உபயோகிக்க ஏற்ற உன்னத டால்கம் பவுடர். இதமளிக்கும் நுண்ணிய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வறுத்தெடுக்கும் கோடையிலும் உங்களை நாள் முழுவதும் சுகமாக இருக்க உதவும். புழுக்கமான காலத்திலும் இனிய நறுமணமுள்ள பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் பூராவும் சுகந்தமான புத்துணர்ச்சியுடன் வைக்கும்!

உங்கள் குடும்பத்தினருக்காக ஒரு டின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் இன்றே வாங்குங்கள்—இப்பொழுது 3 சைஸ்களில் கிடைக்கிறது!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பட்டது)

சற்றும் எதிர்பாராமல் விழும் குத்துக்களைக் கண்டு திணறிப் போனான் நாராயணசாமி. 'பாவி! விட்டுத் தருகிறேன் என்று சொல்லி நிஜமாகவே தாக்குகிறானே' என்ற ஆத்திரத்தில் அவனும் காரசாரமாக இறங்கி விட்டான்.

'தண்டுப்பிடிகள்' நலிந்தன. நாக்கவுட்டுகள் பறந்தன. 'ரெபரி' கையைப் பிசைந்தார். 'ஹோய்' என்ற ஆரவாரத்துடன் கூட்டம் ரசித்துக் கொண்டிருந்தது. அவர்களுக்கு விளம்பரத்தில் படித்தபடி ரோஷமான குத்துச் சண்டை காணக் கிடைத்ததில் பரம திருப்தி. மகா குஷி.

ஆட்டம் முடிவில் ரத்தக் களரியாகிவிட்ட இரண்டுபேரையும் ஸ்ட்ரெச்சரில் வைத்துத் தூக்கிக் கொண்டு போனார்கள்.

**நா**லைந்து நாட்களுக்குப் பிறகு...

காலை நொண்டி விந்தி நடந்து வந்து கொண்டிருந்தான் நாதமுனி.

''என்னங்கரேன்!'' பின்னாலிருந்து கௌரி குரல் வந்தது. ''கண்டுக்காம போறீரு!''

நின்று திரும்பிப் பார்த்து, 'ஙி...ஙி... ஙி...'' என்று இளித்துக் கன்றுக்குட்டியைப் பார்த்து, ''என்ன குட்டி! சௌக்கியமா?'' என்றான். அந்தக் கன்றுக்குட்டியும் பிரியத்தோடு ஓடி வந்து மோழைத் தலையால் கால் முட்டி மீது மோதவே, வலி தாங்காமல் 'ஆ!'வென்றலறித் துடித்துப் போனான்.

''என்ன அன்னிக்கு நல்ல அடியா? இப்ப எப்படி இருக்கு?''

''அதை ஏன் கேக்கறே! மூணு நாளாய் நடக்கவே முடியல்லே! பொட்டைப் பயல்! நான் ஏமாந்த சமயம் பார்த்து வாரிட்டான். இல்லையானா...'' என்று பல்லைக் கடித்தான். ''நேரிலே வந்தான்னா...''

''இதோ நேரிலே வந்தேன். என்னடா பண்ணுவே?'' என்ற குரல் வரத் தொடர்ந்து நாராயணசாமியும் பிரசன்னமானான். ''என்னடா நாதமோனி! என்ன சவாலடிக்கறே!''

''வேணும். எனக்குக் கோபம் வரும்!''

''அவனோட உனக்கென்னடா பேச்சு?''

''நீ யாரு அதைக் கேட்க!'' என்று கௌரியின் கூடையிலிருந்து அரிவாளை எக்கிப் பிடித்து எடுக்க, ''தே? சும்மா இட! என்னை இதையும் கோதான்னு பார்த்தியா? நடந்து தொலை! நான் வரேன்!'' என்று கொஞ்சம் நடந்தவன் திரும்பி நின்று ''மாமோய்... நாராயணசாமி மாமா! கல்யாணத்துக்கு இந்த வன்தாளையும் கூடக் கூட்டியார மறந்து விடாதே!'' என்று கன்றுக்குட்டி தொடரச் சென்று மறைந்தான்.

'ஹ' என்றுன் விழித்திருப்பான் நாதமுனி. அவ்வளவு ஆச்சரியம். பிறகு ஆடு வழிய, ''உன் முறைப் பொண்ணுன்னு சொன்னியே. அது இதுதானா வாத்தியாரே!''

''ஆமாம்'' என்றான் நாராயணசாமி, சுரத்தே இல்லாமல்.

''கல்யாணம்னு சொன்னாளே'' என்றவாறு அவன் கைகளைப் பிடித்துக் குலுக்கினான். ''திருமண வாழ்த்து வாத்தியாரே!''

அவன் பிடியிலிருந்து கையைக் கழற்றிக் கொண்டான் நாராயணசாமி. ''பேசாமப் போய் அவளைக் கட்டிக்கப் போற அந்த

நான் பல விதங்களில் பொருந்த ஆசைகள் கொண்டிருந்தவன். ஆனால் இப்போது ஒரே ஓர் ஆசைதான் உள்ளது — வரப்போகும் ஆண்டுகளில் எனக்குள்ள எல்லா பலத்தையும் சக்தியையும் நவபாரத நிர்மாணத்திலேயே செலவிட வேண்டும்; என் சக்தியைப் பரிபூரணமாக இழந்து, குப்பைக் குவியலில் என்னைத் தூக்கி எறிகிறவரையில் செயல் புரிய வேண்டும் என்பதுதான் என் ஒரே ஆசை. என்னைப் பற்றி நீங்களோ, மற்றவர்களோ பிற்பாடு என்ன நினைப்பீர்கள் என்பதில் எனக்கு அக்கறையில்லை. பணியிலேயே நான் பலத்தையும், சக்தியையும் முழுதும் செலவழித்தேனானால் அதுவே போதும். நான் போன பின் என் புகழ் என்றும் என்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. என்றாலும் வரப் போகும் காலத்தில் என்னைப் பற்றி யாரேனும் மதிப்பிட விரும்பினால் அவர்கள் என்னைப் பற்றி இவ்வாறு கூற வேண்டுமென்று ஆசைப் படுகிறேன்: ''இந்த மனிதர் தமது பூரண அறிவாலும் இதயத்தாலும் இந்தியாவை விரும்பினார், இந்திய மக்களை விரும்பினார். அவர்களும் அதற்குப் பிரதியாக அவருக்கு எவ்வளவோ விட்டுக் கொடுத்தார்கள்; தங்களுடைய அன்பை அளவுக்கு மீறியும், மிகவும் தாராளமாக அவருக்கு அளித்தார்கள்.''



— சென்னையில் 1952-ம் ஆண்டு நிகழ்த்திய உரையிலிருந்து.

மதுரை மாப்பிள்ளை கிட்டே போய்ச் சொல்லு. சந்தோஷப்படுவான்.''

''என்ன சொல்றே அண்ணாச்சி?''

''ஆமாண்டா! நான் பார்த்த அன்னைக்குத் தான் மதுரையிலேருந்து பாக்கு வெத்திலை மாத்திட்டு வந்ததாம் மாமன். அது தெரியாமத்தான் நானும் ஆடிட்டேன். நீ...''

''நான்தான் அந்தப் பொண்ணைப் பார்த்துப் பல்லை இளிச்சேனே தவிர அது என்னமோ சாதாரணமாகவே பேசிக்கிட்டுத் திரிஞ்சது.''

''ஏதோ... விவரம் தெரியாமல், ஒரு பொண்ணுக்காக நாம வீணா அடிச்சிக் கிட்டோம். ஆமா! காலிலே எலும்பு பிசகிப் போச்சுன்னாங்களே எப்படி இருக்கு?'' என்றான் நாராயணசாமி கனிவாக!

''பரவாயில்லே அண்ணாச்சி!'' என்றான் நாதமுனி பணிவாக. ''உன் கை எப்படி இருக்கு. தேவலையா?''

''கொஞ்சம் ஆயிடுச்சுடா நாதமோனி'' என்று அவன் தோளில் கையைப் போட்டுக் கேட்டான் நாராயணசாமி. ''அது சரி! அடுத்த 'காம்ப்' இருச்சி இல்லே! யாருக்கு? உனக்கா? எனக்கா?''

# துக்கடா

**வி**ளையாட்டுக்களில் பெருத்த ஈடுபாடு கொண்டிருந்தார் ஸ்ரீ ஜவாஹர்லால்ஜி. எத்தனையோ அலுவல்களிடையேயும் தலைநகரத்தில் நடந்த எந்த 'டெஸ்ட்' பந்தயத்துக்கும் கால் பந்து பைனலுக்கும் ஒரு நாளேனும் ஆஜராக அவர் தவறியதில்லை.

1951ம் ஆண்டு தேசிய விளையாட்டரங்கம் திறக்கப்பட்ட சில மாதங்களுக்குப் பின் ராஷ்டிரபதி கட்சி – பிரதமர் கட்சி என்று இரண்டு கட்சிகளுக்கிடையே (அரசியல் கட்சிகளல்ல, விளையாட்டுக் கட்சிகள்தான்!) நடைபெற்ற கிரிக்கெட் பந்தயத்தில் தமது கட்சித் தலைவராக விளங்கினார் நேருஜி. அரசியலில் அரும் சாதனை பல புரிந்த அவர் இரண்டு மூன்றே ரன்கள்தான் எடுக்க முடிந்தது. 'அவுட்'டாகிவிட்டார் – அல்லது 'அவுட்'டாக்கிக்கொண்டார் என்று சொல்வதே பொருந்தும். ஏனெனில் அவர் அவுட்டானபோதிலும் அம்பயர் அவ்வாறு கட்டளை பிறப்பிக்கவில்லை. நேருஜி தாமாகவே அவுட்டாகி விட்டதாகச் சொல்லிக் கொண்டு மட்டையும் கையுமாகக் களத்திலிருந்து திரும்பினார்.

அரசியல் வாழ்வில் போல, விளையாட்டிலும் அவர் தோல்வி கண்டால் எடுத்துக் காட்டுபவர் யாரும் உடன் இருக்கவில்லை!

க் க் க்



நேருஜியின் காவிய உள்ளத்தையும் எழுத்துத் திறமையையும் ரசிகத்தன்மை பெற்ற எவரும் போற்றியே ஆக வேண்டும். பிரகிருதியின் எழிலின் பருவகால நிலை அனைத்தையும் சிறையின் மூலைகளின் நோக்கியவாறு லக்னோ சிறைக் கூடத்திலிருந்து அவர் எழுதுகிறார்: "சில சமயங்களில் மூலைகள் மறைந்து பிரியும். அவற்றின் இடைவெளியில் அற்புதமான பருவ கால அழகு தெரியும். பிரமிப்பூட்டும் ஆழமும், கருமையும் கூடிய நீலப்பரப்பைக் காணும்போது அது அனந்தத்தின் ஒரு துண்டு என்றே தோன்றும்."

"சிறையில் பலவற்றை இழக்க வேண்டியிருக்கிறது. அவற்றில் மகத்தான இழப்பு பெண்களின் குரலையும், குழந்தைகளின் சிரிப்பையும் கேட்காதிருப்பதே" என்று பிறிதொரு சமயம் எழுதினார்.

க் க் க்

நேருஜியிடம் ஹாம்லெட் குணமொன்று உண்டு. எது சரி – எது தப்பு என்று எப்போதும் குழம்பிக் கொண்டிருப்பதுதான் அந்தக் குணம். வெளிப் பார்வைக்கு அவர் பிடிவாதமாகவே தோன்றினாலும் உள்ளூறக் குழம்பிக்கொண்டே இருந்தார் என்று கூறலாம். காந்திஜியுடன் நிலவுகூர்ந்து பேசும் போதெல்லாம் அவர் அநேகக்கு எவ்வளவோ பின் தங்கிவிட்டோம் என்று நேருஜி சொல்லாத பிரசங்கம் இல்லை.

ஆதிநாளில் அவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கையில் பேராசிரியர் ஒருவர், "மாணவர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து ஆராய்ச்சிகள் செய்கிறார்களே, கவனித்தாயா?" என்று கேட்டாராம். நேருஜி தயங்கினார். பிறகு, "அந்தப் பிரிவுகள் இருக்கட்டும்; எனக்குள்ளேயே பல பிரிவுகள் இருக்கின்றனவே! அவை...?" என்றாராம்.

க் க் க்

நேருஜிக்குத் தமது அன்னையிடமும், தங்கைகளிடமும், மனைவியிடமும், மகளிடமும் இருந்த பாசம் அபரிமிதமானது. அவர் தமது சுயசரிதையில் இப்படிப் பல அன்புமயமான நிகழ்ச்சிகளைக் கூறுகிறார்.

மரணத்தை நெருங்கிக் கொண்டிருந்த மனைவி கமலாவைக் காண்பதற்காகப் பரோலில் விடுதலையானார் ஜவாஹர். பரோல் முடிந்து, மீண்டும் அவர் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அப்போது போலீஸாருடன் அவர் காரில் ஏறிக்கொள்ளச் சென்றபோது நோய்வாய்ப்பட்டிருந்த தம் அன்னை ஸ்வரூபராணி வெறி பிடித்தாற்போல் தமது கைகளை அகல விரித்துக் கொண்டு அவரைப் பிடித்திழுக்க வருவதுபோல் ஓடினார். "அவருடைய முகபாவனை என்னை நீண்ட காலம் பேயாகப் பிடித்து உலுக்கியது" என்றாராம் நேருஜி.

க் க் க்

கமலா நேரு தம்முடன் அந்தரங்கமாக அரசியல் துறையில் போராட விரும்புகிறார் என்பதைத் தாம் புரிந்து கொள்ளாததற்கு ஆறாத பச்சாதாபம் கொண்டவர் நேருஜி. மாண்டுபோன மனைவிக்கே தமது சுய சரிதத்தை சமர்ப்பிக்கும் நேருஜி அவளது இறுதிக் காலத்தைப் பற்றி உருக்கமாக எழுதுகிறார். "சில சமயங்களில் அவளுடைய கண்களுக்குள் நான் நோக்கும் போது, அவற்றிலிருந்து எனக்கு முன்பின் தெரிந்திராத ஒருவர் என்னை உறுத்துப் பார்ப்பதாகத் தோன்றும்" என்கிறார். தம்மைக் கேள்வி கேட்டுக் குடையும் அந்தப் பார்வையை எண்ணி எண்ணித் தமது முன்கோபத்தையும், அதிகாரப் போக்கையும் தாமே குறை கூறிக் கொள்கிறார்.

நேருஜியின் எல்லையில்லாத அன்பைப் பெற்று, இன்று எல்லையில்லாத சோகத்தில் ஆழ்ந்திருப்பவர் ஸ்ரீமதி இந்திரா என்பதை நாடறியும். இந்திராவின் முழுப் பெயர் இந்திரா பிரியதர்சினி. சிறையிலிருந்து உலக சரித்திரத்தைக் கடித உருவில் மகளுக்கு எழுதி வந்த நேருஜி ஒரு கடிதத்தில் எழுதினார்: "பிரியதர்சினி என்றால், 'பார்க்கும்போது பிரியத்தை உண்டாக்குபவள்' எனப் பொருள். ஆனால் உன் விஷயத்திலோ உன்னைப் பார்க்கக் கொடுத்து வைக்காத போது பிரியம் மேலும் பெருகுகிறதே!"

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

